# தாமஸ் மசாரிக்



விருதை ந. இராமசாமி

கலை மன்றம்
சென்னை-1

# பதிப்புரை

—o—

விடுதலை வீரன் 'தாமஸ் மசாரிக்' இன எழுச்சி மிகுந்தவர்;தாய் மொழிப் பக்தியில் சிறந்தவர். 'செக்' நாட்டில் 'ஆஸ்திரிய'ரின் ஆணவ மொழியை எதிர்த்துப் போராடி வெற்றி கண்ட முதல்வர் **மசாரிக்**. தனிப்பெரும் தலைவர் தாமஸ் மசாரிக்கின் தீரச் செயல்களை விளக்கும் வரலாற்று ஏடே இந்நூல்.

மொழிப்போர் வீரர் தாமஸ் மசாரிக்கின் வாழ்க்கை வரலாற்றினை உணர்ச்சி ஊட்டும் தீஞ்சுவைத் தமிழில் தருகிறார் தோழர் இராமசாமி. தமிழர்கள் யாவரும் படித்துப் பயன் அடையும் வண்ணம் நூல் வடிவாக்கி உங்கள் முன் வைக்கின்றோம். ஏற்று மகிழ்வீர்களாக!

வணக்கம்

—கலைமன்றத்தார்.

# அங்கும் - இங்கும்

மொழிப்போராட்டம் கண்ட முதல் நாடு 'செக்கோஸ்லோவாகியா'—முதல் முயற்சியிலே - அந்த மொழிப்போராட்டத்திலே—உயிர்ப்பலியிட்ட இரண்டாம் நாடு 'திராவிடம்'

அங்கு மொழிப்போர் வெற்றி பெற்றது—இங்கு இது காறும் முழுக்க வெற்றி பெறவில்லை.

அங்கும் மொழி மயக்கம் மூட்டி தாய்மொழியைத் தீய்த்து, ஆட்சி பீடம் அமர்ந்திருந்தனர் 'ஆஸ்தியர்'—இங்கும் செந்தமிழைச் சூறையாடி மந்தி மொழியான இந்தியைப் பரப்பி மத்தியப் பேரவையில் அமர்ந்து ஆட்சி கொண்டுள்ளனர் 'வடவெறியர்'.

அங்கும் 'செக்' இனம் அடிமைப் பரம்பரை யாக்கப்பட்டிருந்தது—இங்கும் 'திராவிட' இனம் சூத்திரப் பரம்பரையாக—வைப்பாட்டி வாரிசாக எண்ணப் படுகிறது—இழிவு படுத்தப் படுகிறது—பேசப்படுகிறது—நடத்தப் படுகிறது.

அங்கும் அக்கிரமங்களை அள்ளி வீசி ஆணவ ஆட்சி புரிந்தனர் ஆரிய வர்க்கத்தினரான "ஜெர்மானியர்". இங்கும் மதம்—கடவுள்—சாஸ்திரம்—சம்பிரதாயங்கள்—ஆகியவைகளைப் பேசி அநியாய ஆட்சி நடத்துகின்றனர் 'ஆரிய வடவர்'.

காலம் வேறுபட்டது தான். ஆனல் கருத்தும்—கடமையும்—நிலைமையும் ஒன்றே அங்கும் இங்கும். அன்று அவண் நிலவிய துயரத் தோற்றம்—துடி துடித்த காட்சி—பதை பதைத்த பரிதாபம்—பவுசு இழந்த படலப்-இன்று இவண் பரவி படர்ந்திருக்கின்றன.

அங்கு முற்போக்கு வாதியாக முளைத்தார் — முயன்றார்—முறியடித்தார்—முதல் மக்கள் தலைவராக பதவி ஏற்றார்—"மசாரிக்". இங்கு மொழிப்போர் மூள—இன எழுச்சி வளர—திராவிடத் தனியரசு மலர—பணியாற்றுகின்றனர் "பெரியார்—அண்ணு"

அங்கு—"மாவியா"—என்னும் இனப்பாசறை அமைத்தார் "மசாரிக்!" இங்கோ "திராவிட இயக்கம்"—"திராவிட முன்னேற்ற இயக்கம்" — என்ற இரட்டைக் குழல்கள் இணைந்த சுழல் வெடிப்பொறி ஏந்தியுள்ளனர் "பெரியார்"—"அண்ணு".

அங்கே 'செக்'இனத்தின் அரசு பூத்தது—புகழ்கொண்டது—புதுமையும் மண மணத்தது. இங்கே திராவிட இன அரசு இன்னும் அரும்பக்கூட இல்லை.

இந்த சந்தர்ப்பத்திலே "மசாரிக்கின்" வாழ்க்கை வரலாற்றை திராவிடப் பெருங்குடி மக்கள் படித்துணர்தல் அவசியம்— அவசரம் என அறிந்தேன். மசாரிக் வரலாற்றினை விளக்கிடும் இந்நூலைப் படைத்தேன்.

மொழி—இன உணர்ச்சி கொண்ட இயக்கத்தினருக்கு இந்நூல் எழுச்சி யூட்டும் — ஏற்றம் தரும் — எஃகு உரம் அளிக்கும்—என்றென்றும் எழில் நிறை வழி காட்டும்— என்பது எனது பணிவான துணிவு.

"ஐயர்" ஜனதிபதியாகவும்—'அண்ணு' வெளிநாட்டு மந்திரியாகவும் — வீற்றுத் தனியரசு அமைத்து — பொதுவுடைமை சமைத்து—" திரா்விட நாடு " திக்கெட்டும் புகழ் மணக்க திகழ வேண்டுமாயின், அதற்கான வெற்றிக்கு 'மசாரிக்'இன் வரலாறு விளக்கம் தரும்—விவேகம் தரும்— விரிவுரை தரும்—இது உறுதி.

" எமில் லட்விக் " எழுதிய—"ஜனநாயகத்தின் பாதுகாவலர்"—('Defender of Democracy' by Emil Ludgwig) என்ற

எடும்—"**விக்டர் கோகன்**" எழுதிய—"**மசாரிக்கின் வாழ்க்கையும் காலமும்**"- 'Life and Times of Masarye' by Victor Cohan) என்ற நூலும்—"**விக்காம் ஸ்டீட்**" எழுதிய—"**தலைவர் மசாரிக்**" —('President Masarye' by Wictham Steed) என்ற தொகுப்பும்—இன்னும் சில அறிஞர்களின் வாழ்நாட் குறிப்புகளும்—"**மசாரிக்**"கின் வாழ்க்கை வரலாற்றை நூல் வடிவமாக்க துணைபுரிந்தன.

எழுதினேன் நான்—எடுப்பான பார்வை பொங்க ஏற்றமாக அச்சிட்டு புத்தக உருவாக்கினர் கலைமன்றத்தார். அவர்களுக்கு என்றென்றும் என் நெஞ்சை விட்டு நீங்காத நன்றி!

கலா நிலையம்
விருதுநகர்.

அன்பன்
விருதை. ந. இராமசாமி

# 1. அவன் யார்?

"பூட்டுத் தயாரிக்கும் பட்டறைக்கே இலாயக் கற்ற மட்டரகப் பையன்"

"உழைப்புக்கே உதவாத ஊதாரிப் பயல்"

"படிப்பிலே மட்டும் விருப்பு—பட்டறை வேலையிலே வெறுப்பு—சுறுசுறுப்பே இல்லாத சோம்பேறி—இந்த சோதாவை விரட்டியடிக்க வேண்டியது தான்"

இவ்வாறு ஈட்டிகளெனப் பாய்ந்த சொற்கள் எத்தனை எத்தனையோ!

இக் கண்டனங்கள் இதயத்தை இம்மிக்கு இம்மித் துளைத்தெறிந்தன—இடருக்கு இலக்காக்கின. இருப்பினும் இன் முகத்தோடு ஏற்றுக் கொண்டான்—எடுத்தடி வைத்தான்—ஏறு நடைபோட்டான்— "இடுக்கண் வருங்கால் நகுக" என்று பண் இசைத்தான்—வாழ்வுப் படலங்களைப் புரட்டினன்.

ஏமாற்றம் கண்டபோது திகைத்தானு? எவரேனும் இம்சித்தபோது பகைத்தானு? இல்லவே இல்லை!

கொடும்புகை கப்பிய கொல்லப்பட்டறை—உதிரத்தை உறிஞ்சும் உலைக்கூடம்—உழைத்து உடைந்து உரமிழந்த ஒதுக்குப்புறம்—உருக்குலைந்த உள்ளங்கள் ஊடாடும் உறைவிடம்—இங்கே உழைத்தான். உழைத்துக்கொண்டே யிருந்தான் வியர்வை ஓட—உடல் ஆட—ஆனல் உள்ளம் மட்டும் படிப்பை நாட.

மாடு—குதிரைகளுக்கு 'லாடம்' அடித்தல்—கொழுமுனைகளைக் கூராக்குதல்—உழவுக் கருவிகளைச் செப்ப

னிடுதல்—இவை அவனது அன்றாட அலுவல்கள். அல்லற் தந்த அவதிகள். அயர அடித்த அத்தியா யங்கள்.

"சந்தை கூடும் நாட்களிலும்—உழவு காலத்தி லும்—அறுவடைப் பருவத்திலும் 'அப்பாடா!' என்று அயரக் கூடாது—பேசக் கூடாது—சோம்பல் கூடாது.

அரை நாழிகை நேரங்கூட அப்புறம்—இப்புறம் திரும்பமுடியாது. அவ்வளவு தூரம் அடுத்தடுத்து வேலை கள் தொடுத்து வந்துகொண்டே யிருக்கும். வெறும் பொழுது போக்க முடியாது. வேதனை யென்று விளம்ப முடியாது. வியர்வையைத் துடைத்து—விரிந்து பரவும் 'பெருமூச்சை விட்டு— உம்' என்று உழைப்பால் தள ரும் உடலை முறித்துவிட்டு ஓய்வுபெற முடியாது.

வேலையைத் தட்டிக் கழித்து விரட்ட வேறு வழியை கையாண்டால், குட்டும் உதையும் அட்டியின்றி கிடைக்கும் அவனுக்கு. சர்வ சதா செயலாற்றியே தீர வேண்டும். பட்டிக்காட்டுக் கொல்லப்பட்டறை எனில் கேட்கவும் வேண்டுமோ உரிமையாளரின் கெடுபிடி அமர்க்களத்தை!

இந்த வேதனை மிக்க வேலையிலுங்கூட—கஷ்ட மான காரியத்திலுங்கூட—வீண் பொழுது போக்காமல் பாடுபட்டான் அவன்.

கடினமான இரும்பை நெருப்பிலிட்டு—கனிய வைத்து—காரண காரியத்திற்கேற்ப — தேவைக் கேற்ப—உருக்கொடுத்து மாற்றுவதில்—பணி புரிவ தில்—அவனது உள்ளத்திலே எழுச்சி—மகிழ்ச்சி.

"பட்டறை வேலைக்கு லாயக்கற்றவன்—உழைப் புக்கு உதவாதவன்" என்றெல்லாம் ஏசப்பட்டப் பின் னரும் இப்படி நாள் முழுக்க—உடல் உலர—உழைத் தான் ஓய்வின்றி அவன். மன வலிமையால்—மாசற்ற மகிழ்ச்சிப் பெருக்கால்....மலை நிகர்த்த காரியத்தையும்

மலர் பறிக்கும் நினைப்பில் செய்து முடித்தான் அவன். கள்ளமற்ற உள்ளத்துடன்—களிப்பேரும் கருத்தோடு - கர்ணகடூர வேலையையும் கச்சிதமாக முடித்து வந்தான் அவன்.

இவ்வாறாகத்தானே—தனது புண்பட்ட வரலாற்றைப் புடம் போட்டு எடுத்துப் பொன்னாக்கிய பாட்டாளி—பட்டினிப் பட்டாளத்தின் கூட்டாளி—பண்பால் சிறந்த செயலாளி—வேறு யாருமல்ல. உலக வரலாற்றுப் பொன் ஏட்டிலே புகழும்—பெருமையும் கொண்ட உத்தமன் "தாமஸ் மசாரிக்."

## 2. உலக வரலாறு

உலக வரலாறு என்பது உருண்டோடிய நாட்களை எடுத்துரைக்கும் எழில் மாடம்-கால மாறுதல்களை பற்பல கோணங்களில் எடுத்துக்காட்டும் கண்ணாடி—மொழி, கலாச்சாரம், பொருளாதாரக் கட்டுக்கோப்பு, அரசுமுறை ஆகியவைகளின் வளப்பங்களை வழி வகுத்துக்காட்டும் வளர்ச்சி மண்டலம்—மனித உயிர்களின் அன்றாட வாழ்வினை பதிப்பித்து வைக்கும் அச்சுயந்திரம்—கடந்துபோன நாட்களின் நளினங்களை—நாசவேலைகளை—சித்திரிக்கும் மறு பதிப்பு.

வரலாற்றின் மேன்மையை மனிதன் உணராமலிருந்திருப்பானாயின், உலகம் இதுகாறும் இருள் சூழ்ந்தே கிடந்திருக்கும். ஒரு சாராரை, மற்றொரு சாரார், புரிந்து கொள்ள வரலாறுதான் வழி காட்டியாகும்—விரிந்த மண்ணுலகை விளக்கிக்காட்டும் விவேகத்திற்கு, பரந்த கடல் வெளி பாதையிலே இராக் காலத்தில் வழிகாட்டத் தோன்றும் "லைட் ஹவுஸ்" வெளிச்சமாகும்.

ஆகவே வரலாற்றை வாழ்வின் வழிநூலாக நாகரிக மனிதன் பேசுகிருன்—போற்றுகிருன்—பெருமைப்படுகிருன்.

உலகத்தின் நடை பாதைச் சுவடுகளை சித்திரிக்கும் சுவடிகளை புரட்டும் போது, பொன்னெளிக் காலம்—புகழ் பெருத்த நேரம்—அதிசயமான நிகழ்ச்சி—அபூர்வமான எழுச்சி—நெஞ்சை உருக்கும் கட்டம்—நஞ்சைத் தந்த திட்டம்—இப்படிப் பல்வேறு படலங்களை, சிந்தனையின் ஆய்வுக்கு—தெளிவிற்கு—திரையிட்டுக் காட்டுகின்றன உலக வரலாறு!

இவ்வரிசையிலே இடம் பெற்ருேர் எண்ணிக்கையில் பலர். அவர்களுள்—அணி வைரம்—அரி ஏறு—"தாமஸ் மசாரிக்."

ஊசலாடிய ஊரை உருவாக்கியவர் — நைந்து கிடந்த நாட்டை நலமுறச் செய்தவர்—அடிமைத் தளையை அறுந்தெறிந்த அண்ணல்கள்—சமுதாய மேடு பள்ளங்களைச் செப்பனிட்ட செம்மல்கள்—ஏற்ற தாழ்வுகளை இல்லையென் ருக்கிய யோகிகள்—ஏகாதிபத்தியங்களை எதிர்த்து தன்னினம் காத்த தியாகிகள்—இவ்வாறு ஆக்க வேலைகள் புரிந்த அறிவு மேதைகள் அனுபவ தாதைகள் அநேகர் உண்டு. அவர்களுள் "தாமஸ் மசாரிக்" அங்கம் பெறுகிருர் அகன்று கிடக்கும் ஆழ்கடல் முத்துப் போல!

பண்டு தொட்டு பெருமையும் — புகழும்—படாடோபமும் வாய்ந்த வம்சத்தில் வந்தவர்கள்—உல்லாச உப்பரிகையின் உச்சியிலே உலவியவர்கள்—மாபெரும் மன்னர்கள்—மகத்தான மதவாதிகள்—இவர்களின் கதைகள் எத்தனை எத்தனையோ உலக நூற்களில் இடம் பெற்றுள்ளன.

இதற்கு மாருக குழவிப் பருவம் முதற்கொண்டே, பொழுது புலர்ந்தது முதல்—அந்தி சாய்கிறவரை—வேர்வை ஓட—மேனிவாட—உள்ளம் ஒடிய-உழைத்து

உழன்று, பாடுபட்ட பலனை கண்ணால் கூட பார்த்து அனுபவிக்க முடியாது மனம் நொந்து மாயுங்குடியிற் பிறந்து-அணைப்பாரும் ஆதரிப்பாருமின்றி-'முயற்சி திருவினையாக்கும்' என்ற மூலமந்திரத்தினால் முன்னேற்றமடைந்த மக்களுள் தலையாய நிலையடைந்தவர்களின் வாழ்க்கை விவரங்களும் பல பல இருக்கின்றன.

ஆட்சி தலைவர்களாக—அறிவின் குன்றுகளாக —விஞ்ஞான விற்பன்னர்களாக—விவேக மேதைகளாக—விளங்கினவர்களின் வாழ்நாட் குறிப்புகளும் அநேகம்.

இவற்றுள் வைரமணி மகுடம் போன்றது

"மசாரிக்"கின் மாண்பு நிறை வாழ்வு.

பல நூற்றாண்டுகளாக பெயர்கூட வெளி உலகுக்கு தெரியாமல் திசையற்றுக்கிடந்த தொன்மையான நாடு-மாற்றானின் மமதையால், வாதும் சூதும் நிறைந்த சுயநலமதியாளரின் வஞ்சனையால், சூழ்ச்சியினால், சுகம் மாறிக்கிடந்த நாடு—தனக்கெனத் தனி பண்பு, நாகரிகம், மொழி, இலக்கியம், வாழ்வு முறை, கிடைக்கப் பெறாத மக்கள் எனப்பிறரால் பழித்தும் இழித்தும் பேசப்பட்ட நாடு—அடிமைச் சங்கிலியால் அழுத்தமாக இறுக்கப்பட்டு இடர் கொண்ட நாடு—"செக்கோஸ்லோவாக்கியா!"

இவ்வீழ்ந்து கெட்ட நாட்டின் விளக்கொளி—விடிவெள்ளி—விவேகமதி—"தாமஸ் மசாரிக்"

அருங்குணங்கள் அமைந்த பெருங்கருத்துடையவர்—அறிவும் ஆற்றலும் ஒருங்கே பெற்ற அஞ்சா நெஞ்சுள்ளவர்—அனுபவ வழிமுறைகள் அறிந்த ஆராய்ச்சியாளர்.

அன்பின் அவதாரம் — அறிவின் உதாரம் — விவேகத்தின் கனிவளம்—வீரத்தின் நிலைக்களம்—நம்

பிக்கையின் நாயகம்—நலிந்தோரின் தாயகம்—எல்லாம் அவரே.

அன்பு—அறிவு—ஆற்றல்—ஆராய்ச்சி —இரக்கம் —வீரம்—உழைப்பு—நம்பிக்கை—இவைகளே "மசாரிக்கின்" வாழ்க்கை வரலாற்றின் அத்தியாயங்கள்—பொது நலப் போராட்டத்தின் படைபலங்கள்.

இப்பண்புகளே அன்னுரை அறுபது ஆண்டு வயதுக்குமேல் அயராத—கவர்ச்சி மிக்க புரட்சி வீரராக்கின.

விடுதலை தேடித்தந்த வள்ளல்—சீர்திருத்த செம்மல்—என மக்கள் மன்றத்திலே மகோன்னத நிலை அடைந்தார் "மசாரிக்"

## 3. இளம் பருவம்

கை கட்டி—வாய் பொத்தி அடக்க ஒழுக்கமாய் ஒரு ஓரத்திலே நிற்கிறுர் ஒரு மூதியவர், எஜமானரின் கண் ஜாடையை நோக்கி!

"டேய்! வண்டியைப்பூட்டு" என்ற அதிகாரத் தொனி பிறக்கிறது. காற்றெனப் பறந்து குதிரைக்குக் கடிவாளம் மாட்டி—வண்டியில் பூட்டி தயாராக இருக்கிறுர் அம்முதியவர்.

பாதையில் நொடியிலிருந்து வண்டி ஆட்டம் கொடுத்தால்—மேடு பள்ளங்கள் இருந்து வண்டி குலுங்கினல்—எஜமானனின் சுடு சொல்லுக்கும் அடி உதைக்கும் ஆளாகித்தீர வேண்டும். அந்தக் காலத்திலே பிரபு வீட்டு வண்டிக்காரனுக வேலை செய்வதென்றுல் அது விளையாட்டுக் காரியமல்ல—வேதனையின் கோபுரம்.

பாத்திரங்கள் தேய்த்துப் பரிசுத்தம் செய்கிருள். சுவற்றிலே படிந்த தூசியையும்—வீட்டின் - மூகட்டிலே தொங்கும் ஒற்றடையையும் நீக்கி சுத்தம் பண்ணுகிருள். வீடு பெருக்கி கழுவி விட்டு அலங்கரிக்கிருள் ஒரு பெண்மணி.

வண்டியோட்டி—பணிப்பெண் இவ்விரு எளியவர்களின் இல்லறச்சோலையிலே பூத்தமலர்தான் "மசாரிக்"

பிரபு வீட்டிலே புகையும் மனத்துடன் பணி புரிந்தவர் " தாமஸமசாரிக்கின்" தந்தையாராகிய "ஜோசப் மாசாரிக்." தாயாரோ திமிர்பிடித்த சீமான் வீட்டுவேலைக்காரி. இவர்கள் தம் பிள்ளைக்கனி அமுதாகப் பிறந்தார் "மாசரிக்"

" அடிமை மகன் " என்ற பரம்பரைப் பட்டம் கிடையாதே தவிர செயலில் அடிமைகளே! கொத்தடிமை—குலவடிமையாக வந்த குடும்பத்திலே உதித்தவர்தான் "ஜோசப் மசாரிக்"

1850-ம் ஆண்டு மார்ச் திங்கள் ஏழாம் நாள் "செக்கோஸ்லோவாக்கிய" நாட்டின் வரலாற்றிலே புதுப்படலம்—புதுமை அங்கம்—புரட்சிக்கனல். ஆம். அன்று தான் 'மசாரிக்' செக் மண்ணிலே தவழ்ந்தார் செல்வக் குழவியாக.

அந்நாட்டின் இரு பிரிவு மக்களான—'செக்' — "ஸ்லோவக்" ஆகிய இரு சாராரும் உரிமை கொண்டாடக்கூடிய அளவுக்கு 'மசாரிக்கின்' பிறப்பு அமைந்திருந்தது. தந்தை 'ஸ்லோவக்' பிரிவு. தாய் 'செக்' பிரிவு. ஆகவே இருபெரும் கூட்டுப் படைப்பாகப் பாவித்தனர்—போற்றினர் சுற்றத்தினர்.

தேக்கமான நம்பிக்கை—ஊக்கமான எண்ணம்—தீர்க்கமான செயல்—இவற்றிலே ஆடவரைவிட பெண்டிரே சிறந்தவர். தன் மகனே—மகளோ உயர்ந்த நிலை எய்தல்வேண்டும். அதனைக் கண்டு சித்தம் குளிர

வேண்டும். இப்படிக் காண ஆசையில் ஆண்களைப் பார்க்கிலும் பெண்கள் மிகவும் விருப்பம் உள்ளவர்கள். இவ் ஆசை தாய்மை தந்த ஜீவ சத்தின் வாய்மை.

இப்பொதுமைக் கொள்கை 'மசாரிக்' வாழ்வில் பொய்த்து விடவில்லை.

தாயார் "தெரசா" தன் அருமருந்தன்ன மகன் "மசாரிக்" மகத்தான நிலை பெற விரும்பினுள் முயன்ருள்.

"ஏழை வண்டியோட்டியின் மகனுக்கு ஏனிந்தப் படிப்பு?

இது ஊராரின் புரணிப்பேச்சு.

"படித்தால் வேலைக்கு வளைய மாட்டான். வீணுக அவனைப் படிக்க வைக்க விருப்பமில்லை எனக்கு"

இது பாட்டாளி தந்தை 'ஜோசப் மசாரிக்கின்' சோர்ந்த உள்ளத்தே தெரிந்த சொற்ருெடர்.

"என் மகன் சிறிதாவது படித்து கேவலம் ஒரு வாத்தியாராக வந்து விடவேண்டும். அப்போது தான் எனது பெற்ற வயிறு குளிரும். பேணி வளர்ந்த கைகள் சாந்தி பெறும்."

இது அம்மா "தெரசா" வின் துயரம் கலந்த ஆசை வாசகம்.

இந்த ஏறுக்குமாருன போராட்டச் சூழ் நிலையிலே பள்ளிப் படிப்பு நிகழத் தொடங்கிற்று.

ஒரே இடத்தில்—ஒரேயடியாக, ஸ்திரமாக குடியிருக்க முடியாமல் ஊர் ஊராய் அலைந்து திரிந்த மசாரிக் குடும்பம் தங்கியிருக்க நேர்ந்த அத்தனை சிற்றூர்களிலும் பெரிய பள்ளிக்கூடமே கிடையா.

பால் மணம் மறந்து 'மசாரிக்' பள்ளி வாழ்விற்கு போகும் பொழுது அவர்கள் தங்கியிருந்த சிற்றூருக்கு

சற்று தொலைவிலுள்ள "ஹஸ்டோபெக்" என்னும் பேரூரிலிருந்த நடுத்தரப் பள்ளியிலே சேர்ந்து படிக்க வசதி ஏற்பட்டது. அப்போது 11-வது வயது அவருக்கு.

வாரிவிடப்படாத தலைமுடி—அழுக்கேறிய ஆடைகளில் ஆயிரம்ஒட்டுகளுக்குஅத்தாட்சி-வண்டிக்காரர்கள் அணியும் பொத்தான்களுடன் கூடிய அந்த முரட்டு உடையின் காட்சி—பிற பிள்ளைகளின் நகைப்புக்கும், நையாண்டிக்கும் ஏற்ற தோற்றம்—இவற்றோடு பள்ளிக்குச் சென்று வந்தார் அனுதினமும்.

அடுத்த ஊரில் போய் படித்து பயன் காண்பது என்பது அவ்வளவு சாமான்யமா என்ன? சங்கடங்களின் சங்கிலித்தொடர் அல்லவா அது.

இப்போதும் காணுகிறோமே கிராமிய மாணவர்கள் நகரங்களில் வந்து படிக்க எத்தனை இன்னல்களை அனுபவிக்கின்றனர் என்பதை! குடியிருப்பு—சாப்பாட்டு வசதி—அன்றாட செலவு—இவைகளுக்காவது வகை வேண்டுமே!

"ஹஸ்டோபெக்கில்" வாழ்ந்த தன் சகோதரி வீட்டிலே மசாரிக்கை இருக்குமாறு செய்து அதற்கு கைமாறாக அந்த சகோதரியின் பிள்ளை ஒன்றை தான் ஆதரித்து வளர்ப்பதாக ஏற்றுக்கொண்டதன் மூலமாக "மசாரிக்கின்" படிப்பிற்கு வழிகண்டாள் "தெரசா." மகனுடைய கல்வித் தேர்வில் அம்மாதா காட்டிய அக்கறை தான் எனனே!

பெற்றோர்கள் பிள்ளைகளைப் பள்ளிக்குத்தான் அனுப்புவார்களே யொழிய அங்கேயுள்ள ஆசிரியர்களின் அன்பையுமா சம்பாதித்துக் கொடுப்பார்கள்?

பயிற்சி பெறும் மாணவர்க ளல்லவா ஆசிரியர்களின் அன்பையும், அரவணைப்பையும் பெறுதல் வேண்டும். இவ்விடயத்தில் "மசாரிக்" மிகமிக மதிநுட்பம் மிக்கவரேயாவர். ஆசிரியர்களின் அன்பையும்,

அரவணைப்பையும் பெற்று தனது மாணவப் பருவத்தின் மேன்மைக்கு வழி வாய்க்கால் அமைத்துக்கொண்டார்.

பயமும்—பக்தியும் இரு கரைகள். பள்ளமாக நீண்டோடிக் கிடந்த பயிற்சி என்னும் வாய்க்காலில் தேர்ச்சி எனும் தெளிநீர் தங்கு தடையின்றி ஓடியது. பதின்மூன்றும் பிராயத்திலேயே "ஹஸ டோபக்" நகரின் நடுத்தரப் பள்ளிப் படிப்பை நலமே முடித்துக் கொண்டார்.

ஆனல் பதினறுவது வயது வருகிற வரையில் கல்லூரியில் சேர இயலாது. அங்கு அந்தச் சமயத்தில் ஏதுமின்றி காலந்தள்ளவும் அவரது ஏழ்மை வாழ்வு இடங்கொடுக்கவில்லை.

"வீயன்ன" நகர். இங்கே பூட்டுத் தயாரிக்கும் பட்டறையிலே "மசாரிக்" ஒரு கையாள். இந்த வேலை சிறிதும் சுவையில்லாதது. இரும்புத் துண்டை அச்சு யந்திரத்திலே வைத்து அழுத்தி அழுத்தி எடுக்கவேண்டியது அவருக்கு இடப்பட்ட பணி.

அங்கே அவருடன் வேலை பார்த்த குறும்புக்கார சிறுபயல்கள் அவர் பேணி போற்றிய புத்தகங்களை—உலகப்பட நூற்களை—திருடினர்—பாழ்பண்ணினர்—புண்படுத்தினர் அவரை. இந்த இடமும்—இரும்புப் பட்டறையும்—வேலையும் ஒத்துவரவில்லை அவருக்கு வெகு குறுகிய கால அளவிலேயே.

இரவோடு இரவாக எவரும் அறியாவண்ணம் சொந்த ஊருக்கு ஓடிவந்துவிட்டார் அவர்.

தன் மகன் வேலைக்கு உதவாதவன் என்று ஏற்கனவே நசநசத்துக்கொண் டிருந்த ஜோசப்புக்கு 'மசாரிக்' ஓடிவந்த செய்தி கோபத்தை மூட்டியது. பிள்ளையின் பண்பறியாத அப்புண்ணியவான்

'மசாரிக்கை' உள்ளூர் கொல்லப்பட்டறையில் அமர்த்தினர் வேலைக்கு!

இங்கேயும் ஊராரின் கேலியும் கிண்டலும் அம்புகளாகப் பாய்ந்தன. அவரது மாணவ இளமனசைக் குடைந்தன அவைகள். மனம் மருண்டாரா? அன்றி மலைத்தாரா? அல்ல.

இவ்விடத்தில்தான்—இப்போதுதான்—வருங்கால வீரராக விளங்குவதற்குரியவாறு வார்க்கப்பட்டன அவரது உள்ளமும்—உருவமும்!

இரும்பை உருக்கி உருக்கி உருவாக்கிப் பயின்று பாராட்டப்பெற்ற அவர் பிற்காலத்திலே மக்களை மக்களாகவே உருவாக்கப்போகிறார் என்பதை அன்று அவர் உள்ளிட்ட எவருமே எண்ணிக்கூடப் பார்த்ததில்லை.

"சிக்கலான செயல்களையும் சமாளித்து சுலபமாக வெற்றிகாண வேண்டுமாயின் இளம் பருவத்திலே—மாணவப் பிராயத்திலே மனம் பக்குவப்படுத்தப்பட வேண்டும். நான் பிற்காலத்திலே புரட்சிக்காரனாக மாறி செயலாற்றும் திறனை பெற்று வெற்றி அடைந்ததற்கு ஆதிகாரணமே அந்தப் பட்டிக்காட்டு கொல்லப்பட்டறைதான்"

இவ்வாறு அவரே தம் வரலாற்றின் ஒரு பகுதியில் கூறுகிறார்.

பின்னர் "வீயன்னு" நகரில் கல்லூரி மாணவராக அவர் படித்தபோது "பழைய கருப்பன்தானே இவன்" என்ற நினைப்பிலே கவைக்குதவாத பிள்ளை என ஏளனஞ் செய்த கொல்லர் ஒருவரின் கண்முன்பாக அங்கே கிடந்த இரும்புத் துண்டு ஒன்றை எடுத்து உடனே உலையிலிட்டு சம்மட்டியால் அடித்து அழகான —வலுவான—லாடமாக ஆக்கிக் காட்டினர் அவர். கண்களால் இக்காட்சியைக் கண்ட அவர் வாயடைத்துப் போனர். அவர்தம் ஆற்றலைக்கண்டு அதிசயித்தார்.

"சபாஷ்" என்று சொல்லி முதுகைத் தட்டிக்கொடுத்து உற்சாக மூட்டினர்.

கல்லூரி மாணவர் — காலத்தை முன்வைத்து நாளை பட்டதாரியாக உலவப் போகிறவர்—இன்று கொல்லப்பட்டறை பணியாளர். என்ருலும் கல்லூரி மாணவர்தான்.

கிழிந்துபோன ஆடை—வழிந்து ஓடும் வியர்வை—கருகி கருத்த முகம்—நடமாடினர் நன்ருகப் படிக்க வேண்டுமென்ற நினைப்பு நெஞ்சிலே நிழலாட!

ஆனல் இன்றைய நமது கல்லூரி மாணவர்களோ பசைபோட்ட 'காலர்' விரைப்பாக நிற்க—மடிப்பு குலையாத சட்டை மின்ன—கரத்திலே கைக்கடிகாரம் கண்சிமிட்ட — கன்னியரின் கடைவிழிப் பார்வை கிடைக்காதா? களிப்பு கிட்டாதா? என ஏங்கி நடமாடு கின்றனர்! வீடு வாசலை விற்று—நிலப்புலன்களை பணப்பேய்களிடம் அடமானம் வைத்து—உடலைக் கசக்கிப் பிழிந்து—ஓடிஆடி உழைத்து—பணம்தேடி—'தான் பெற்ற மகன் கல்லூரியில் படிக்கிருனே—பீஸ் கட்ட வேண்டுமே' என மனம் பதறி அனுப்புகின்றனர் பெற்ருேர். ஆனல் அந்தப் பரிதாபத்திற்குரிய பெற்ருேரின் மகனே ஏதும் கவலையின்றி ஓய்வுநேர உல்லாசப் போக்குகளில் மிதப்பதைக் காணுகின்ருேம்.

விரல்விட்டு எண்ணக்கூடிய அளவு மாணவர்கள் தான் இருக்குமிடம் தெரியாது, "தாங்கள் உண்டு—தங்கள் படிப்பு உண்டு" என வாழ்கின்றனர். இப்படிப் பட்ட மாணவர்கள் அசடுகளாக—பித்தர்களாக—பிற மாணவர்களால் பாவிக்கப்படுவது மட்டுமல்ல, கேலிச் சித்திரங்களாகவும் ஆக்கப்பட்டு விடுகின்றனர்.

இக்கால கல்லூரி காளையருக்கு "மசாரிக்கின்" கல்லூரி வாழ்வு ஓர் களஞ்சியப் பாசறை! கருத்துச் செறிந்த கலாநிலையம்!

ஒருநாள்—அன்றைய நாள்தான் "மசாரிக்கின்" இரட்டை .வாழ்வுக்கு ஒரு திருப்பம்—திசை மாற்றம் ஏற்பட்டது. அன்று அலங்கோலத் தோற்றத்துடன் ஒரு வாளியில் தண்ணீர் மொண்டு வீதியில்வரும் வேளையிலே—வழியில் முன்பு தன்மீது அன்புகாட்டிய, ஆதரித்த ஆசிரியர்களுள் ஒருவரை கண்டார். வெட்கித் தலை குனிந்தார். ஆனல் அப்படியே கண்டும் காணுதவராய் தட்டிக்கழிக்க மனமோ வரவில்லை. வாளியை கீழே வைத்தார். வணங்கி நின்றார் கைகளை கூப்பிய வண்ணம். என்றாலும் பேச்சுக்கு இடம் கொடுக்க இஷ்டமில்லை! விருட்டென்று நடந்து மறைந்தார் வாளியுடன்.

அவரை அடையாளங் கண்டுகொண்ட அவ்வாசிரியர் மனம் இரங்கி, 'தெரசா'விடம் சென்று படிப்பில் மட்டும் கவனம் செலுத்தி படிப்பதற்கான வழியை உண்டுபண்ணினர்.

ஒரு பக்கம் உடலை வருத்தும் உழைப்பு—மற்றொரு பக்கம் அறிவை உறுத்தும் படிப்பு—இவ்விரண்டுங் கெட்டான் நிலையை மாற்றினல்........? கல்வியுடன் கலந்த தொழிலாக இருப்பின் பாதகமில்லையல்லவா? ஆகவே"லட்விக்" என்னும் ஊரின் கண்ணுள்ள பள்ளிக் கூடத்திலே துணை ஆசிரியராக 'மசாரிக்கை' அமர்த்தினர் அந்த ஆசிரியர்.

இப்போது 'மசாரிக்' மாணவர்—ஆசிரியர் என்ற இரு நிலைகளில் வாழ்க்கையை ஓட்டினர். கல்வியில் காட்டிய ஆர்வத்திற்கோ—உள்ளத்திற்கு ஊட்டிய ஊக்கத்திற்கோ அளவில்லை இது சமயம்.

"பிச்சை புகினுங் கற்கை நன்றே" என்ற அவ்வை மூதாட்டி அருளிய அருமையான வாசகம் உலவாத நாடுதான், செக்கோஸ்லோவாக்யா!" ஆனலும் 'பிச்சை புகினுங் கற்கை நன்றே' என்னும் மூதுரையைக் கடைப்பிடித்தார் "மசாரிக்". இம் மூலமந்திரம் பிறந்த

நம் நாட்டவரோ "கற்பது பாவம்—குலத் தொழிலைக் கடைப்பிடித் தொழுகுவதே குல தருமம். மனுதர்மத்தின் கட்டளை இது" என நேற்றுவரை வாழ்ந்தனர். ஏன் இன்னமுங் கூட வாழ்கின்றனர்.

தலை எழுத்தை நம்பி தகுதி மறந்த தறுதலைகள் நிறைந்த நாடு—'விதி—விதி' என்று கூறி வேதியன் வகுத்த வழி வீதியில் அலைகின்ற நாடு—நமது நாடு! இங்கே கல்விக்கு ஏது கௌரவம்? பூர்வ ஜென்ம பூஜாபலன் இருந்தால் தான், பையன் தன்னைப்போல படிப்பானே என்று எண்ணிவாழும் பெற்றோர்கள் கற்றதனலாய பலனைப்பற்றி ஏன் கவலைப்படப் போகிறார்கள்? பரீட்சையிலே தேர்வுதானு? அல்லது தோல்வி தானு என்று "பராசக்தி" முன்பு பூகட்டி வைத்துப் பார்க்கும் மாணவர்களுக்கு தங்கள் அறிவு ஆற்றல் மீது எப்படி தன்னம்பிக்கை தோன்றும்?

குரு பீடத்தில் அமர்ந்து பாடம் சொல்லிக் கொடுக்கும் நேரம் போக மிகுந்த நேரத்தில் அவர் வகுப்புக்குச் சென்றுதான் படிக்க முடியும். எனவே வசதி அரை குறையாகத்தான் கிடைத்தது. இக்குறையினை ஈடுகட்ட அவ்வூர் நூல் நிலையத்தினின்று பல்வேறு நூற்களையும் எடுத்து வந்து ஓயாது படித்தார்.

இதரச் செலவுகளுக்கு பொருள் ஈட்டும் பொருட்டு பல குற்றேவல்களையும் செய்யப் பின் வாங்கினரா? பின் தங்கினரா இதனல் படிப்பிலும் பணியிலும்? அல்லவே அல்ல. செலவை செம்மைப்படுத்த அவர் செய்த சேவைகளைப் பார்த்து சிரித்து சிந்தை மகிழ்ந்தனர் சோம்பேறி மாணவர்கள்.

அந்த ஊர் மாதா கோவிலில் தீர்த்தப் பாத்திரம் தாங்கி நின்று சில்லறைக் காசுகளை சேகரிப்பது யார்? யாரேனும் இறந்துவிட்டால் அங்கே தோத்திரப் பாடல் பாடி பணம் பெறுபவர் யார்? எல்லாம் அந்த "மசாரிக்" தான்.

இப்படி உபதொழில் பார்க்கும் போதாவது துயர மின்றி இருந்தாரா? அவருக்கு "லத்தீன்" மொழியின் சொற்களை உச்சரிக்கத் தெரியாது சரியாக! இதனல் மதக் குருமார்களின் மனக் கசப்பைப் பெற்றார். கண்டனத்துக்கு இரையானர்.

அதுமுதல் "லத்தீன்" மொழியை முறையோடு கற்க வேண்டுமென்ற கருத்து உதித்தது அவருக்கு. ஆனல் குருவாக இருந்து கற்றுக் கொடுக்க—விளக்க வுரை விடுக்க—எவரும் கிடைக்கவில்லை. பாதிரியாருக்கே "லத்தீன்" முறை வரப்புரியாதே! பின்னர்........எப்படி? மனம் சோர்ந்தால் முடியுமா? மனச் சோர்வு என்பது தான் 'மசாரிக்கை' மூடிவைக்க முடியாதே! சோர்வை உதறித்தள்ளிய சுறுசுறுப்பாள ராச்சே அவர்!

மாதாக் கோவிலில் மாசுபடிந்து கிடந்த 'லத்தீன்' அகராதி ஏடு ஒன்றை எடுத்து மனப்பாடம் பண்ணி அம்மொழியை கசடற கற்கத் துவக்கினர் மசாரிக்! என்னே ஊக்கம்!

ஆசான் இன்றி கல்வி கற்கும் இந்த அதிசயமான முறைகூட அவருக்கு அனுகூலமாகவே அமைந்தது.

1865-ம் ஆண்டு அவரது 15-ம் வயதில் அவரது தகுதியை தேர்வு செய்த ஆசிரியரும் அந்த அகராதியையே அடிப்படையாகக் கொண்டு தேர்வு நடத்தினர். இதனல் "லத்தீன்" மொழி வல்லுநர் ஆனர் அவர். அத் தேர்தலில் அவர் சிறப்பாக ஒப்பேறுவதற்கு உறு துணையானது அவ் அகராதியை மனனம் பண்ணி—தேயாகும்.

இப்பரீட்சையில் தேறிய பின்னர் "எமாரேவியா" பகுதியின் தலைநகரான "புரூனே" நகரின் ஜெர்மானிய லத்தீன் இலக்கணக் கல்லூரியினுள் நுழைந்தார்.

இன்பமும் மன நிம்மதியும் எட்டாக்கனிகள்தானே ஏழை எளியவர்களுக்கு! "மசாரிக்" மட்டும் இதில் எப்படி விதிவிலக்காக இருக்க முடியும்?

"புருனே" நகரின் செல்வந்தர் வீட்டுப் பிள்ளைகளுக்கு இரவுப்பாடம் படிப்பித்துக் கொடுத்து வரும்படி தேடி ஏழ்மையை எதிர்த்துப் போராடினார். தன் தம்பியையும் அழைத்து வந்து அவனையும் படிக்க வைத்து அந்தச் செலவையும் ஏற்றுக் கொண்டார்.

இந் நகரில்தான் அவருக்கொரு அருமையான நண்பர் கிடைத்தார். அவர் அவ்வூர் போலீசு அதிகாரி. அவருடைய மகனுக்கு கல்வி புகட்ட போந்த "மசாரிக்" நாளா வட்டத்தில் அவ்வதிகாரியின் நல்லதொரு நண்பர் ஆனார். பின் வாழ்க்கையில் நேரிட்ட பல இடையூறுகளி லிருந்து 'மசாரிக்கை' மீண்டும் மீண்டும் மீட்டது அந்த நட்புதான் — நல்லபிமானம்தான் — பேரன்புதான்.

இப் 'புருனே' நகர் வாசமே 'மசாரிக்கின்' வாழ்விலே முக்கியமான மாறுதலை ஏற்படுத்தியது எனலாம். பிற்காலத்திலே "மசாரிக்" கடைப்பிடித்த மகத்தான கொள்கைகளுக்கும்—அவரால் நிகழ்த்தப் பட்ட உலக அதிசய சம்பவங்களுக்கும்—வித்து இங்கேதான் ஊன்றப்பட்டது.

ஏறத்தாழ "மசாரிக்கின்" இளம் பருவம் இடுக்கண் நிறைந்த வடுக்களால் அலங்கரிக்கப்பட்டது. இப் பருவ காலத்திலே இன்னல்களால் ஏற்பட்ட வேதனை— அனுபவத்தால் அடைந்த சாதனை—அவரை எந்நிலையிலும்—எதையும்—தாங்கும் இதயம் கொண்டவராக— உணர்ச்சி மிக்கவராக—ஆக்கின. எஃகு உள்ளம் படைத்தவர் "மசாரிக்" என்றுதான் "செக்" சரித்திரம் சாற்றுகிறது அவரைக் குறிப்பிடுங்கால். இளமை முகாமிலே அவர் பெற்ற அனுபவ ஆக்கமே பிற்காலப் புகழுக்கு ஆதிகாரணமாக அழகு கொண்டது.

வானை மறுக்கும் பயிர்—தேனை மறக்கும் வண்டு—இசையைத் துறக்கும் குயில்—நிலவை நிந்திக்கும் நீள் கடல்—சோலையை நாடாத குளுமை—சாலையில் ஓடாத சகடம்—காலையில் மலரா கமலம் என்றும் எப்பொழுதும் இருந்ததில்லை.

அதுபோலவே வறுமையை விரும்பாத திறமை இருந்ததாக எவர் தம் வரலாற்றிலும் பார்க்கவே முடியாது.

எத்தகைய துன்பத்திலும்—சூழ் நிலைமையிலும் தன்னை சரிக்கட்டி இழுத்துச் செல்லும் இங்கிதம் "மசாரிக்"கின் இளமை பருவத்திலே அவரிடம் முழு முழுக்க இடம் கொண்டு விட்டது.

# 4. ஆரம்பமும்—ஆதிக்கமும்

மூந்நூறு ஆண்டுகளாக "செக்" நாடு மேகங்களால் மூடப்பட்ட வானம் போல மருளடைந்து, போயிற்று. கீழ் நிலையிலே மிகமிக தாழ்ந்து கிடந்தது. அரசு முறை அற்றது. இயல் நிலை இழந்தது. எடுத்தார் கைப்பிள்ளையாக எண்ணப்பட்டது.

ஆஸ்திரிய—ஹங்கேரியக் கூட்டரசியின் உடும்புப் பிடியில் சிக்குண்டு இரு பகுதிகளாக "பொகீமியா"—"ஸ்லோவாக்கியா"—என்ற பெயர்களுடன் கி. பி. 5-வது நூற்றுண்டு முதல் 17-வது நூற்றுண்டுவரை விளங்கின.

"பொகீமியா" மக்கள் விசித்திரமானதொரு வழக்கத்தைக் கையாண்டனர். அந்நாட்டின் வழி வழி அரசர்கள் குடியற்றுப் போகவே, அண்டை நாட்டு இளவரசர்களைப் 'பொகீமியா' மக்கள் தங்கள் அரசர்களாக தேர்ந்தெடுத்தனர் எனில் அவர்களின் ஏமாளித் தனத்தை பூரணமாக எடுத்தோதிட எப்படி இயலும்?

அவ்வாறு ஆக்கப்பட்ட அரசர்கள் தங்கள் சுய உரிமையினுல் பிற பேரரசுகளின் முடிமன்னர்களாக—"ரோம்" பேரரசின் பெருவேந்தர்களாகக் கூட விளங்கினர்.

"பொகீமியா" மக்கள் ஏமாந்த காலத்திலே ஏற்றங் கண்ட அம்மன்னர்கள் தங்கள் தலைநகரான "பிரேக்கில்" "பொகீமியா"வின் தலைநகரை வைத்து முடிபுனைந்து கொண்டனர்—சட்டசபை நிறுவினர்—நிர்வாக அதிகாரிகளை நியமித்தனர்—மந்திரி சபை அமைத்தனர்—இவ்வாறு "பொகீமியா" மக்களை மூடி வைத்தனர் நலம் புரிவோர் என்னும் நல்ல வேடத்திலே.

இதன் பயனுக 12-ம் நூற்ருண்டு முதல், அக்கம் பக்கத்து வட்டங்களிலிருந்து ஜெர்மானியர் "பொகீமியா"விற்குள் குடியேறலாயினர். பாராளும் பூமான்கள்தான், பிற நாட்டவரை தன் நாட்டிலே புகவிட்டு புன்முறுவல் பூப்பார்களே, அதில் பெரிய மதிப்பு இருப்பதாக எண்ணி! எத்தனையோ ஜெர்மன் இளவரசிகள்—ஏந்திழைகள்—எழில் மிகும் குயிலினங்கள்—இங்கே இறக்குமதி செய்யப்பட்டனர் "பொகீமியா" அரசர்களின் மண மங்கையர்களாக—மனைபுகும் மாதரசிகளாக.

இப்படி மணவினை நிகழுங் காலங்களில் மணமகளிருடன் வந்த பரிவாரங்கள்—"பொகீமியா" அரசர்களைப்பற்றி பாடி பரவசப்படுத்த வந்த பாணர்கள்—பிரபுகளின் பாதுகாப்பின் கீழ்குடியேறிய வணிகர்கள்—சமய போதனைச் சாமியார்கள்—இப் பெயர்களால் ஜெர்மானியர் சிறுக—சிறுக எங்கணும் நுழைந்தனர். பெருகினர்.

இவர்களுக்கு அரண்மனைச் சுகவாசிகளின் சலுகைகளும் சேர்ந்தன. சிறு துளிதானே பெரு வெள்ளம்!

அடுத்தடுத்து ஆயிரமாயிரம் ஜெர்மானியர் அடைக்கலம் புகுந்தனர். குடியேறிய அவர்கள் தொகை அதிகரிக்க அதிகரிக்க, ஆட்டிப்படைக்க ஆரம்பித்தனர். ஆணவத்தின் ஆலவட்டம் அகன்று விரிந்தது.

"ஒண்ட வந்த பிடாரி ஊர் தேவதையை ஓட்டியதாம்" என்பதன் பொருள் பல நாடுகளின் வரலாற்றுக்குப் பொருத்தமாகவே அமைந்திருக்கிறது.

ஒரு நாட்டினுள் பிரிதொரு நாட்டினர் குடியேறுவது—பின்னர் ஒண்ட இடங்கொடுத்த நாட்டினரையே ஓட ஓட விரட்டி யடிப்பது—வரலாற்று வாடிக்கையாகவே இருந்து வருகின்றது. மனித பரம்பரையின் மாருத போக்காகவே மிளிர்ந்து வருகின்றது.

வாணிபம் நடாத்திட வந்த வணிகக்கூட்டம் இருநூறு ஆண்டுகள் நம்மை அடிமை கொண்டு ஆண்டதைக் கண்டோம்!—அனுபவித்தோம்! ஆடு மேய்த்துக்கொண்டு புல்வெளி தேடி வந்த தேவலோகப் பரம்பரையினர் இன்று பாராளக் காணுகிறோமே!

இதுபோலவே தான் "பொகீமியா" விற்குள் போக்கற்று பிழைப்பிற்கு நுழைந்த, 'ஜெர்மானியர்' நாடெங்கும் 'அடிமை' நஞ்சை விதைத்தனர்—'மடமை' லாகிரியை ஊட்டினர்—'கடமை' யை மறக்கும் விஷக் கஷாயம் கொடுத்தனர்.

பழங்குடிமக்களின் பண்பாட்டைப் பழித்தனர்—நாகரிக நல்வாழ்வை நாசமிட நாட்டம் கொண்டனர்—தங்களைவிட பிறப்பில் வாழ்வில் தாழ்ந்தவர்கள் என தலைத்துடுக்காய் பேசினர்—அவர்களது தாய்மொழியை இழிமொழி—புண்மொழி — தீயமொழி—இலக்கிய மில்லாத, இயலற்ற மொழி—என்றெல்லாம் இகழ்ந்தனர்—உடைமை கொண்ட மக்கள் உழவுமாடுகளாய் உழைப்பதற்கே லாயக்குள்ளவர்கள் என்றும் பிறவி அடிமைகளாய் பணியாற்றி வாழவே பாட்டாளி வகுப்

பினராக பிறந்தனர் என்று மனத்திமிரோடு கூறினர்.

சிறுகச் சிறுக — ஆனல் திட்ட மிட்டு செம்மை யுறச் செய்துவந்த ஜெர்மானியரின் இச் சூழ்ச்சிப்பொறியில் 'பொகீமியா' மக்கள் சிக்கினர்—சிதறினர் சிறப்பிழந்தனர். அந்தகார அனுச்சாரத்தில் அகப்பட்டுக் கொண்டனர்.

சிந்தனைச் சுடர் செத்தது—பகுத்தறிவுப் பறிபோனது.

மக்கள் மாக்களாயினர்.

இன்பம் விளையாட வேண்டிய இடத்திலே இருள் கவிந்தது—பெருமை சுரந்தது பவுசு கோட்டும் பாசத்திலே கருமை கடுகடுத்து அருவி பாய்ந்தது

ஜெர்மன் மொழியைப் பேசுவதால் புலமை மட்டுமல்ல அந்தஸ்தும் உயர்ந்துவிட்டதாக "பொகீமியா" மக்கள் ஆவல் பூத்தனர் — ஆமோதித்தனர்—ஆர்ப்பரித்தனர். ஜெர்மானிய நடை யுடை பாவனைகளை மேற்கொண்டால் பெரும் பாக்கியம் என்று பெருமை பேசினர்.

'செக்' குடியினிற் பிறந்த சீமான்கள் இப்படி எண்ணியதுடன் நின்றுவிடவில்லை. செயலில் திறன்பட—சிறப்புற-காரியம் பார்த்தனர். 'அரசன் எவ்வழியோ அவ்வழியே மக்களும்' என்பதுபோல அரச மரபினரும் —பிரபு வர்க்க பெருமான்களும்—பின் பற்றும் பெருமைக்குரிய பாதையை பாமர மக்களும் பின் தொடர்ந்தனர்—பேதமை கொண்டனர்.

சுய மரியாதைச் சுடரொளி சாகச்சாக—பகுத்தறிவு நீர் நிலையிலே பாசிப் படரப்படர—நயவஞ்சக நாடக நளினங்கள் நாடெங்கும் பெருகப்பெருக "செக்" நாட்டின் வீழ்ச்சி சிறகடித்து அதலபாதாளத்திற்கு அடி சரிந்தது.

ஜெர்மன் மொழி எளிதாக பேச்சு வழக்கிலே இடம் பெற்றது. பெயர்களைக்கூட ஜெர்மானியப்

பெயர்களாக மாற்றிக்கொண்டனர் சில மகானுபாவர்கள். சுற்றிச்சூழ ஜெர்மானியச் சாயல் படிந்தது. பட்டி தொட்டிகள் எங்கணும் அன்னியர்தம் பண்புகள் பரவின. அரசர்களின் அதிகாரத் துணையாலும்—மதத்தின் மகத்தான திருநாமத்தாலும்—ஜெர்மானியர் இத்திருப்பணியை தங்கு தடையின்றி—பங்கப்பழுதின்றிப் பரப்பினர்—பக்குவப்படுத்தினர்—பயனும் பெற்றனர்.

அண்டி பிழைக்க வந்த தோரணையில்—பாவனையில்—ஆரம்பமாகி—இப்போது ஜெர்மானிய ஆதிக்கம் அடிகோலி வலுபெற்று வளப்பம் கொண்டது,

இந்த இடத்திலே அங்கேயும் இங்கேயும் ஒப்பிட்டுப் பார்த்தால், ஏகாதிபத்ய எண்ணங்கொண்டோர் எல்லா நாடுகளிலேயும்—எல்லாக் காலங்களிலேயும்—ஒரே கட்டுப்பாடான முறையைத்தான் கையாண்டுள்ளனர் எனும் உள்ளங்கை நெல்லிக் கனிபோன்ற உண்மையைத் திரைப்படம் போட்டு காட்டுகிறதல்லவா?

இந்தியாவினுள் எடுத்தடி வைத்து நுழைந்தவுடனே, ஆரியர்கள் இதிகாசங்கள் இயற்றி எங்கும் பரப்பினர்—"சமஸ்கிருதத்தை" தேவ மொழியாகக் கற்பித்து உலவ விட்டனர்—"வர்ணாசிரம" வேதத்தை விதைத்துப் பரப்பினர்.

அவர்களது ஆதிக்கம் காலம் காலத்திற்கு அசையாதிருக்க ஆண்டவனை ஆதரவிற்கு வைத்துக்கொண்டனர்—தங்களை எல்லாம் 'பூதேவா பரம்பரை' யெனப் பிரச்சாரம் செய்தனர்—மக்களை என்றென்றும் மாரூட்ட நிலையில் வைத்திருக்க மதத்தை மங்காத் துணையாக கரமேந்திக் கொண்டனர்-சமஸ்கிருத மொழியினால் கர்ப்பகிரகத்தில் கடவுளின் காதினில் ஓதினால் தான் அவருக்கு செவிமடை திறக்கும்— அருள் பாலிப்பு கிடைக்கும்—என்று, அறியாமைக்கு ஆளான மக்களை நம்ப வைத்தனர்.

மொழியின் வழி வாய்க்கால் மூலமாக ஒரு நாட்டை அடிமைப்படுத்தி ஆதிக்கம் செலுத்த முடியும் என்பதை உலகுக்கு எடுத்துக் காட்டியவர்கள் ஆரியர்களே.

இதே மொழி ஆதிக்க முறையைத்தான் "ஜெர்மானியர்" "செக்" நாட்டிலே "பொஹீமியா" மக்களிடம் பரீட்சித்துப் பார்த்தனர் — பலனும் கண்டனர் — பலிசும் கொண்டனர்.

ஆகக்கூடி முடிவு என்னவா? "செக்" நாடு சீரழிந்தது — சிரம் தாழ்ந்தது — சீலம் கவிழ்ந்தது.

## 5. இன உணர்ச்சி

வீழ்ச்சி யுற்ற போதிலும் எழுச்சிமுரசு கொட்டுவோர் — உறங்கிக் கிடக்கும் உன்மத்தம் பிடித்த மக்களுக்கு உணர்ச்சி யூட்டுவோர்—சிதைந்துபோன சமுதாயத்தைச் சீர்படுத்திச் செம்மை செய்வோர்-படுபடு பாதாளத்திலே ஆழ்த்தப் பண்பாட்டினைப் பாதுகாக்கப் பாசறை அமைப்போர் — விசை யொடிந்த நாட்டிலே வீணர்களை விரட்டி யடித்து விடுதலை வாங்கித் தருவோர்—எப்போதுமே எந்த நாட்டிலும் இருக்கத்தான் செய்தார்கள்—இருக்கத்தான் இருக்கிறார்கள்.

அடிமைப்பட்ட நாடு — அமுக்கப்பட்ட இனம் — என்பதால் மட்டும் அநேகமாய் அனைவருமே அறிவிலிகளாக ஆகிவிடுகிறதில்லை. இருந்தும் விடுகிறதில்லை. பகுத்தறிவு இழந்தவர்கள பலராக இருப்பினும், சீர்திருத்தச் செம்மல்கள்—தியாகப் பெருவெளிச் சிங்கங்கள்—சிலர் இல்லாமல் போய்விடுவதில்லை. பலர்கூடி சாதித்ததைப் பார்க்கிலும் இந்தச் சிலர் வழிவகுத்து—பாதைகாட்டி—பயன் கண்டதே ஏராளம். இப்போதுநியதி உலக வரலாற்று ஏடுகளில் எந்தப் பக்கத்திலும் போய்த்தது கிடையவே கிடையாது,

இதில் "செக்" நாடு மட்டும் எப்படி மக்காக இருந்து விடும்? இங்கேயும் காலத்தின் வளர்விலே எழுச்சி முரசு எழுப்பப்படத்தான் செய்தது.

எல்லோருமே கருத்திழந்து — கண்மூடிகளாய் உறங்கிவிடவில்லை—வாழ்ந்துவிடவில்லை.

13-ஆம் நூற்றாண்டின் துவக்கத்திலேயே நாட்டுப் பற்றுள்ள நல்லறிவாளர்கள் நடமாடத் தொடங்கினர். தங்களது அன்னை நாட்டிற்கு வந்துள்ள ஆபத்தை அறிந்தனர். எல்லோருக்கும் எடுத்துக்காட்டி—பகுத் துணரும் பண்புவளர பாடுபட்டனர்.

இப்படி விழிப்புணர்ச்சித் துறையில் சிறப்புடன் செயலாற்றிய விவேகிகள்—சமய சீர்திருத்தவாதிகளாக —புலவர்களாக — சரித்திரச் சான்றோர்களாக— மொழித்துறை வல்லுனர்களாக—இலக்கிய ஆராய்ச்சி யாளர்களாக—இருந்துவந்தனர். ஒவ்வொருவரும் அவ ரவர் சொல்வளம் சிறப்படையும் துறைகளில் மக்களை விழிப்புணர்ச்சியும், விவேக வளர்ச்சியும் பெறும்படி அயராது முயன்றனர்.

இந்தச் சமயத்திலேதான் "செக்" மொழிக்கு திருந் திய வரிவடிவம் தீட்டித்தந்த தீனரும்—பற்பல நூற் களின் பதிப்பாளரும்—அநேகம் அநேகம் அறிவியல் ஏடுகளின் ஆசிரியரும்—கல்லூரி விரிவுரையாளரும்— ஆன "ஜான் ஹஸ்" சீர்திருத்த இயக்கம் கண்டார், திராவிடத்திலே "பெரியார் ஈ. வெ. ரா." சுயமரியாதை இயக்கத்தைத் தோற்றுவித்ததுபோல.

கத்தோலிக்க மதச் சட்ட திட்டங்களையும்—வழி பாட்டு முறைகளையும்—பாதிரிமார்களின் குறைகளையும் —தாக்கிப் பேசியது "ஜான்ஹஸ்"ஸின் சீர்திருத்த இயக்கம். இதற்கேற்றவாறு அக்காலத்திய மதக் குரு மார்கள் ஜெர்மன் வர்க்கத்தினராகவே இருந்தனர். இப்பாதிரிமார்களிடையே ஒழுக்கக்கேடு மலிந்திருந்தது.

இதனல் கத்தோலிக்க வழிபாட்டு சட்டதிட்டங்கள் அவசியமற்ற வரையறைகள் என்ற கருத்து மக்களிடம் நிலவ ஆரம்பித்தது.

மதத்தை எதிர்ப்பவன் மகா மன்னனுக இருப்பினும்—முடி அரசனுக விளங்கினும்—பிடிசாம்பலாக்கி—ஆடிக் காற்று வேகத்தில்—அறந்தாங்கி, நாகப்பட்டினத்தில் அடித்த அகோரப் புயல் வேகத்தில்— "பூ" வென்று ஊதிவிடுவார்களே மதவாதிகள். பாவம்! இந்நிலைமையில் சாமான்யராகிய "ஜான் ஹஸ்" எம்மாத்திரம்!

அவரை அப்படியே விழுங்கி ஏப்பமிட, மதம் வாயைப் பிளந்தது மலைப்பாம்பென! அதன் எரிமூச்சு எப்படி தென்றலாக இருக்க முடியும்? உயிரையே குடிக்கும் விஷக்காற்று அல்லவா அது!

"இனி என்னவாகும்? எப்படியாகும் நிலைமை?" என்பதைப்பற்றி எல்லாம் அந்தச் சிந்தனைச் செல்வன் சிறிதும் சிந்தித்து பயப்பட்டதே கிடையாது. தனது அறிவியக்கத்தின் ஒளி வடிவம்—உறைவிடம்—உயிர் எழுத்து—எல்லாம் தன் உயிர் தியாகத்தில்தான் இடம் பெறும்—எழுப்பப்படும்—எழுதப்படும் என்பதனை ஆதி நாளே அந்த கர்மவீரர் நன்கறிந்திருந்தார்.

ஆகவே அவர் எண்ணியிருந்த எதிர்பார்த்திருந்த —ஏற்றம் கொண்டது என்று போற்றத் தயாராக இருந்த—அப்பொன் நிகர்த்த புனித நாளும் வந்தது—நடக்க வேண்டியதும் நடந்தது.

ஆம்! அந்த அறிவின் அனிச்ச மலர்—ஆக்கத்தின் உருக்கு இரும்பு — "ஜான்ஹஸ்" அண்ணலுக்கு, தன் முன்னிலையிலேவந்து சமாதானம் கூறவேண்டுமென்று ஆணை பிறப்பித்தார், ஆண்டவனின் நேரடியான பிரதிநிதியாய் அவனியில் ஆட்சிபுரியும் "போப்பாண்டவர்."

அதே நேரம் "பொகீமியா" புரவலனுக வீற்றிருந்த "வாக்லாக்" ஆபத்தொன்றும் நேரிடாது இவ்வறிவின்

வளர்மதிக்கு" என்று தான் வாக்குறுதி அளித்தார். ஆனால் நடந்ததோ........?

ரோம் நகரை யடைந்த "ஜான் ஹஸ்" அங்கே சிறையிடப்பட்டு விசாரணை செய்யப்பட்டார். சீறிப் பாய்ந்த மதம் சும்மா விடுமா? சிறுத்தை வாயில் சிக்கிய சின்னஞ்சிறு சுண்டெலி உயிர் தப்புமா?

சிந்தனைப் பெட்டகம் சிதறி நொறுங்கிச் செந்தூள் பட்டது.

1415-ஆம் ஆண்டு ஜூலை மாதம் ஆறும் நாளன்று 'செக்' சரித்திரத்திலே ரத்தக்கறை பூசப்பட்டது. உண்மை உரைத்தோன்—சமயச் சவுண்டிகளுக்குச் சவுக்கடி தந்தோன்—"ஜான் ஹஸ்"—சீர்திருத்த செம்மல்—தியாகத்தின் சிகரம்- பொதுமக்களின் கண்ணெதிரே சுட்டுப் பொசுக்கப்பட்டார் உயிரோடு!

அடக்குமுறை - அடிதடி - உதை - குத்து- உயிரை வாங்குதல் - தடைகாவல் - தண்டம் வசூலிப்பது—இப்படிக்கான ஆணவ முறைகளால் மனிதனை மனிதன்—இனத்தை இனம்—நாட்டை நாடு—அடக்கி ஒடுக்கி அடிமையாக வைத்திருந்துவிடுவது காலத்தால் நடக்காத காரியம். மனித வரலாற்றிலே நிலைநாட்ட முடியாமல்போன செயல்.

"செக்" நாட்டில் நடந்ததும் அப்படித்தான்.

தாங்கள் போற்றிப் புகழ்ந்த அறிவின் அகல் விளக்கு 'ரோம்' நகரில் அணைக்கப்பட்டுவிட்டதே—நொறுக்கப்பட்டு போயிற்றே—என்று மக்களின் மனச்சான்று மாய்ந்தா போயிற்று?

"ஜான் ஹஸ்" சுட்டுக் கொளுத்தப்பட்ட செய்தி சுரணையற்றவர்களுக்குக்கூட சூடு ஏற்றியது. சுயநல மோகத்தினல் கொஞ்சநஞ்சம் சுதந்திர—சுயமரியாதை உணர்வு கொண்டோர் உள்ளங்களிலே கனன்று கொண்டிருந்த தன்மானச்சுடர் சுவாலைவிட் டெரிந்தது.

பெரும் கிளர்ச்சியாகப் புகைந்தது. பலத்த போராட்டமாக தீச்சுடர் விட்டது.

தங்கள்தம் தன்மான இயக்கத் தந்தைக்கு இழைத்த தீங்கு தங்களுக்கு இழைத்த தீராத் துயரம் என்றும், அது தங்கள்தம் இனப்பற்றுக்கே வைத்த உலை என்றும், தங்களுடைய பிறப்புரிமையைப் பொசுக்கிவிட்ட தீ என்றும் துடித்தெழுந்தனர் 'செக்' நாட்டுப் புரட்சிப் படையினர்.

இக் கொடுமையைக் குழிதோண்டிப் புதைத்தே தீரவேண்டுமென கொதித்தனர்—குழுமினர்—கூட்டணி கண்டனர் நாடெங்கும்.

இப்புரட்சிப் படையினரை—புதுமையின் கருவூலங்களை—புகழ் நிறைந்த பிறப்புரிமையைப் பேணிய பொன் வண்டுகளை—சூறையாட சமயத் தலைவரான "போப்பாண்டவர்" சேனையொன்றை அனுப்பிவைத்தார்.

தங்களைத் தாக்க வந்த ஆணவத்தின் மலை நிகர்த்த மமதையை ."செக்" மக்கள் சித்தம் கலங்காது எதிர்த்தனர்.ஆஸ்திரிய—ஹங்கேரிய—ஜெர்மானிய படைகளையெல்லாம் துடிதுடிக்க துவைத்தெடுத்து தூள்பண்ணினர் தோழர்கள். எதிரி நாடுகளிலேயும் சென்று தங்கள் வீர தீரத்தை நிலை நாட்டினர்.

"ஹங்கேரிய" மன்னன் "சிகிஸ்மாண்ட்" முறைப்படி வாரிசு உரிமையுடன் 'செக்' நாட்டுக்கு மன்னனாக நியமனம் பெற்ற நேரத்திலே, அவனை அகற்றிவிட்டு அரசனுக்கு பதிலாக, "கண்ணவை" (Council of Regency) ஏற்படுத்தி அதன் ஆளுகையில் வாழ்ந்தும் காட்டினர் வண்ணமாக.

இச்சீர்திருத்த இயக்கத்தினர் தங்களது கழகத்தின் அடையாளச் சின்னமாக கோவில் தீர்த்த கிண்ணத்தையே பொறித்துக் கொண்டனர்.

இது பழமையை புதுமையாக்கிய பகுத்தறிவுப் படைப்பல்லவா!

இவ்வியக்கத்தை முன்னின்று நடத்திய "ஜான் சிஸ்கா" என்ற வீரர் கண்பார்வையிழந்த குருடர் என்றால் அவரது நாத்திறமையும் மக்களின் உணர்ச்சியும் துணிவும் பற்றும் எத்துணை மகத்துவம் கொண்டவை என நம்மை வியக்கத்தான் வைக்கின்றன!

எவ்வளவிற் கெவ்வளவு ஜெர்மானிய மோடியில்—அன்னியர் மோகத்தில்—மயக்கமுற்றுக் கிடந்தனரோ அவ்வளவுக் கவ்வளவு இப்போது தயக்கமின்றிப் போராடினர்.

மதத்துறையின் மறுமலர்ச்சி இயக்கமாக இருந்தாலும், வரவர வலுவுள்ள அரசியல் இயக்கமாகவே மாறிற்று—நாட்டுபற்றும் கலந்தே உருப்பெற்றது—உரம் கொண்டது.

இவ்வாறு விரைவாகவே விழிப்புணர்ச்சி தோன்றியதற்குக் காரணம் "ஜான் ஹஸ"ஸின் உயிர்க் காணிக்கைதான்.

தமிழகத்திலே செந்தமிழைச் சீரழிக்க இந்தி திணிக்கப்பட்டபோது துடித்தெழுந்த தமிழ் மறவர் படை, இன்றளவும் தலை நிமிர்ந்து நடப்பது ஏன்? இன்றைக்கும் இந்தி ஆதிக்கத்தை எதிர்க்க—போராட—ஆயிரமாயிரம் தோழர்கள் திரண்டு நிற்பது ஏன்? வடவரின் மொழி ஏகாதிபத்தியத்தை முறியடிக்க முன்னேடும் வீரர்கள் மலிந்துவிட்டனரே ஏன்?

இவ்வின உணர்ச்சிக்கு தங்கள் பொன்னன உயிர்களை பலிபீடத்திலே போக்கிக்கொண்ட "தாளமுத்து—நடராசன்" தானே! இந்த இரு இளஞர்களின் எழுச்சிக் குரல் அல்லவா இன்றுவரை தமிழகத்தின் மூலை முடுக்குகளி லெல்லாம் முரசொலித்து எதிரொலிக்கின்றது.

மொழியால் தம்மை மூடமாக்கிட மூடு மந்திரம் போடும் வடவர்பால் தமிழர் பெரும் படைக்கு எத்துணை வெறுப்பு—பகைப்பு—கொதிப்பு இருக்கிறதோ அது போலவே........

தங்களை இழி இனம் எனக் கருதிய ஜெர்மானியரின் கர்வத்தையும் ஆதிக்கத்தையும் களைந்தெறிய வேண்டுமென்ற கொந்தளிப்பு விளைந்தது. தாங்கள் வேறு—ஜெர்மானியர் வேறு என்னும் வேற்றுமை வளர்ந்துவிட்டது அவர்களுக்குள்ளே. நாகரிகம்—பண்பாடு—நடைமுறை—பழக்க வழக்கங்கள்—அனைத்திலும் தங்களிடமிருந்து ஜெர்மானியர்கள் முழுக்கவும் மாறுபட்டவர்கள் என்று மெய்ப்பித்தனர் முன்னணிப் படைவீரர்கள்.

"செக்" மொழியிலேயே செம்மையாகப் பேசுவது—ஊர்ப் பெயர், ஆள் பெயர், பொருள் பெயர் முதலியவைகளை 'செக்' பாணியிலேயே எழுதி வருவது—என முடிவு கொண்டனர். அதன்படியே நடைமுறையில் கையாண்டனர்—தற்பொழுது தமிழகமெங்கும் தமிழ் மொழிக்கு தனிச்சிறப்பு ஏற்பட்டு, எழுத்து—பேச்சு—கலை ஆகிய துறைகள் அனைத்திலும் தமிழ் மணங்கமழுவதுபோல!

'செக்' மொழி அரசாங்க அரியாசனம் ஏறிற்று. இம்மொழியை முதன்மையாகக் கொண்ட பள்ளிக் கூடங்கள்—கல்லூரிகள்—கலைக்கூடங்கள்—பெருகின. வரலாறு—நிலவரம்பு—இயல்—கலை—இசை முதலிய பலதுறை நூற்களும் தோன்றின. வெளிநாட்டு மொழிகளினின்று உயரிய நூற்கள் 'செக்' மொழியில் பெயர்க்கப்பட்டன.

மொழி—கலை—பண்பாடு ஆகியவற்றை பாதுகாக்கும் தனிச் சட்டங்கள் இயற்றப்பட்டன.

**1500**-ம் ஆண்டில் "பில்சன்" என்ற நகரமும்—**1514**-ம்ஆண்டில் "லிட்டோ மெரிஸ்" என்ற ஊரும்—

'சேக்' மொழி பேசாத எவரும் தம் எல்லைகளுக்குள் குடி யேறி பிரஜா உரிமை பெற முடியாதென தடை செய்தன.

மொழி போராட்ட வரலாற்றிலே, தாய்மொழி ஆர்வத் தினல் முழங்கிய முதல் முழக்கம் இது.

''சார்லஸ்'' மன்னன் நிறுவிய ''பிரேக்'' நகரப் பல் கலைக் கழகத்தில் ஜெர்மானியருக்கு அனுமதி மறுக்கப் பட்டது.

இவ்வளவு பெருங்கிளர்ச்சி நடந்ததற்குப் பின்னல் —சீர்திருத்த இயக்க வளர்ச்சியைத் தொடர்ந்து—ஜெர் மானியர் நுழைவும்—அதிகாரமும் தடைபட்டு மங்கி வந்தன.

ஆனலும் ஜெர்மானியர் ''செக்கோஸ்லோவாக்கியா''வை பழி வாங்கும் சமயத்தை எதிர் பார்த்திருந்தனர்.

அவர்களும் அதிக நாட்கள் காத்திருக்க வேண்டிய அவசியமில்லாமல்........அந்தத் தருணம் வந்தது.

## 6. அடக்குமுறை

''பொகீமியா'' அரசுரிமை, வாரிசு முறைப்படி ஆஸ் திரிய ''ஹாப்ஸ் பர்க்'' குடும்பத்தாருக்கு சேர்ந்தது. 1619-ல் மன்னன் ''மத்தயாஸ்'' மடிந்ததும், இரண்டா வது ''பெர்னன்டு'' அரியணை ஏறினன்

அவனே பழுத்த கத்தோலிக்கன்—புரட்சிப் படை யினரைப் பழித்துப் பகைத்தவன். பழிவாங்கினற் போல் ஜெர்மானிய ஆணவம் நாலா வழிகளிலும் கிளர்ந்தெழுந்தது, மக்களின் வாழ்வை மண்ணேடு மண்ணுக்க முயன்றனர் மமதையாளர்கள்.

எனவே அவனை சிம்மாசனம் ஏறவிடாது விரட்டி யடித்தனர் மக்கள். ஆனால் அவனுக்குப் படை வலிமை யும்—துணைபலமும்—அளவில்லாதிருந்தன.

ஒரு பெரும் போர் மூண்டது—'செக்' வாழ்க்கையி லேயே மறக்க முடியாத மாபெரும் போராட்டம் 1620-ம் ஆண்டு நிகழ்ந்தது.

"வெள்ளை மலைப்போர்" என்று வழங்கப்படும் இக் கடுஞ் சண்டையிலே "பெர்னண்டு" மன்னனுக்கே வெற்றி கிட்டியது. வாகை சூடிய பெருமிதத்திலே ஆட்சிபீடம் அமர்ந்தான் அவன்.

அடக்குமுறை பாணங்களை அளவின்றி வீசாமல் இருக்க எப்படி முடியும் வீம்பு கொண்ட வீணர்களால்?

நிலன்புலன்கள் பறிமுதல் செய்யப்பட்டன— கோவில்களில் சீர்திருத்த அணிமணிகளாக நின்ற புதுமை மனப்பான்மையுடையோர் போக்கிடமற்று விரட்டப்பட்டனர். 'செக்' மொழி நூற்களெல்லாம் தீக் கிரையாயின. காடு கழனிகள் கொள்ளையிடப்பட்டன.

"பெர்னண்டு" மன்னனின் கொடுங்கோலாட்சி கூத்தாடிற்று.

மக்கள் பலர் மனம் மருண்டு, இடம் பெயர்ந்தே ஓடினர். 30 லட்சம் பேர் இருந்த இடத்திலே 7½ லட்சம் பேரே எஞ்சியிருந்தனர்.

'செக்' மொழி சீரழிக்கப்பட்டு நாகரிகம் வாய்ந்த செம்மொழி என்ற நிலை திரிந்து, வறுமையி லுழலும் சிறுகுடி மக்கள் பயிலுகிற பெருவழக்கிழந்த அர்த்த மற்ற மொழி ஆக்கப்பட்டது.

சுயமரியாதை நிலையங்கள்—கலைக்கூடங்கள்—மறு மலர்ச்சி மன்றங்கள்—சீர்திருத்தக் கழகங்கள்—யாவும் இருந்த இடம் தெரியாமல் ஒழிக்கப்பட்டன.

பல்கலைக் கழகங்கள் செயலற்றுப் போயின.

வெள்ளிச் சுரங்கங்கள் வேலை செய்வாரின்றி தூர்ந்து போயின.

இக்கொடூரமான காலத்தை நினைத்து மனம் புழுங்காத 'செக்' இனத்தான் எவனுமே இருக்கமாட்டான்.

1627-ஆம் ஆண்டிலிருந்து அடுத்த 300 ஆண்டுகளுக்கு தன் உருவே தெரியாதபடி ஆஸ்திரிய—ஹங்கேரியப் பேரரசின் ஒரு பகுதியாகவே கருதப்பட்டது.

ஒரு தனி இனமக்கள் மாற்றானின் பிடியிலே சுழன்று சூழ்ச்சியாலும்—சதியாலும்—சிதறுண்டு நிலை அழிந்தனர்.

ஆனாலும் "ஜான் ஹஸ்" ஏற்றிவைத்த சுயமரியாதைத் தீபம் அணைந்துவிடவில்லை—உடல் ஒடுங்கியதே யன்றி உள்ளம் ஓய்ந்து விடவில்லை—கலைத்துறையில் கவர்ச்சி—இலக்கியத் துறையில் எழுச்சி—இருந்தே வந்தன.

"கோமனிஸ்"— "டோப்ரோவ்ஸ்கி"— "ஜஸ்மான்"— "சபாரிக்"—"கோய்லார்"—"பலாட்ஸ்கி"—முதலிய பேராசிரியர்கள் "செக்" மொழியின் இலக்கண இலக்கியங்கள்—அகராதிகள்—பாடல்கள்—மொழி பெயர்ப்புகள்—ஆகியவற்றைக் கட்டுக் குலையாது காத்தனர். புதையுண்டுபோன இலக்கிய பெட்டகங்களை புதிது புதிதாக புதுக்கினர்.

துடிதுடிப்பு இருந்தது—துயரைத் தாங்கும் வலிமை இருந்தது—தூங்காத ஆர்வத்தில் தித்திப்பு இருந்தது.

என்றாலும் எதையும் வெளிப்படையாக வலியுறுத்த—கிளர்ச்சி செய்ய—செயல் புரிய சட்ட திட்டங்கள் இடம் அளிக்கவில்லை. இந்நிலைமையில் அறிஞர்கள் கைகட்டி காலம் தள்ளவும் விரும்பவில்லை. பூடகமாக மக்களிடையே உணர்வு மங்காதிருக்க ஆவன செய்தார்கள்—பேசினார்கள்—எழுதினார்கள்.

சுருங்கக் கூறுமிடத்தில் நடப்பில் ஊக்கம்—எதிர் காலத்தில் ஏற்றதொரு நம்பிக்கை—இனப்பற்றின் உணர்ச்சி- இவைகளை ஊறுபட்ட மக்கள் உள்ளத்திலே உணர்த்தி வந்தனர் அவ்வப்போது.

## 7. சுயமரியாதைச் சுடர்

எளியோர்களின் ஏக்கத்தின் எதிரொலியை இன்ப கீதமாக எத்தர்கள் எண்ணியிருந்த நேரத்திலே- வலுவிழந்த நாட்டினரை வீணர்கள் வாட்டி வதைத்து வேடிக்கை கண்ட வேளையிலே—சீர்திருத்தவாதியா? அவன் சிரத்தை துண்டித்துவிடு. ஏசுவின் மார்க்கத்தை சீர்திருத்த எதிர்ப்பவனு? அவனை எரித்து சாம்பலாக்கு. சுயமரியாதை என்று சொல்லுகிறான்? அவனை சுட்டுத் தள்ளு. அன்னை மொழி வாழ்க! அன்னியமொழி வீழ்க என்று பேசுகிறான். அவனை அழித்துவிடு'' என்ற கோரத்தில் அநியாய அமர்க்களம் நடந்த காலத்திலே —"தாமஸ் மசாரிக்" "புருனே" கல்லூரியிலே மாணவர்.

புண்பட்டோரின் புலம்பலை செவிமடுத்தார்— புல்லறித்துப் போனது அவருக்கு.

சிறு வயதிலேயே ஆஸ்திரியச் சீமான்களின் செல்வச் செருக்கை கேள்விப்பட் டிருக்கிறார். வேட்டையாட வரும் அந்த வக்ரபுத்திக்காரர்கள் தன் தாய்மீது அலட்சியமாக ஆடைகளை வீசி எறிந்து சென்ற அதருமம் கூத்தாடும் அந்த டாம்பீக நிகழ்ச்சிகளை நேரில் கண்டுமிருக்கிறார்.

வகையற்ற ஏழைகள் வயிற்றுக்கு வழியின்றி வாடும்போது, அந்தப் பிரபுக்கள் மதுவும் மாமிசமும் உண்டு, விலைமாதர்களோடு விந்தை பாடி விளையாடிக் கொட்டமடிப்பதையும் கண்டார். செழிப்புச் சீராட

வேண்டிய "செக்" நாட்டிலே சுயநலப் பேயர்களின் சூதாட்டமா எனச் சினந்தார்.

நாட்டிலே நாசக்கேடான நிலை—வெளிவேட ஆசார நடிப்பு—கோவில்களிலே குதர்க்க வாதிகளின் கும்மாளம் — இவைகளைக் கண்டு இதயமே இடிந்து போனார்.

சந்தேகங்களையும் — சஞ்சல நிலைகளையும் — சுய அறிவின் துணைகொண்டு ஆராய்ந்து அகற்றி உண்மையினைக் கண்டார். தன் சொந்த அறிவுக்கு சரியென்று நிச்சயமாகப் பட்டதையே கடைப்பிடித்து ஒழுகத் தொடங்கினார்; வெளி உலகுக்கும் எடுத்து விளம்பினார்.

இதன் காரணமாய் சமயவாதிகளின் சவுக்கடிகளையும்—மூடநம்பிக்கைகளில் மூழ்கிக் கிடந்தவர்களின் கல்லடிகளையும்—அரசு வெறிகளின் ஆணவ அடக்குமுறைகளையும்—அடிக்கடி எதிர்த்துப் போராட வேண்டியதேற்பட்டது அவருக்கு!

முதற்கண் அவரது போர் முழக்கத்திற்கு கல்லூரியில் தான் கால்கோல் நாட்டப்பட்டது.

"புருனே" கலா நிலையத்தில் புதிதாக ஜெர்மன் ஆசிரியர் ஒருவர் நியமிக்கப்பட்டார். "செக்" மொழியை உச்சரிக்கும்போதும், எழுதும்பொழுதும் ஜெர்மானிய பாணியிலேயே சொற்களை எடுத்துரைத்து—வரிவடிவில் எழுத வேண்டுமென கண்டிப்பாய் அவ்வாசிரியர் கட்டளையிட்டார்.

ஆனால் "மசாரிக்" அவரது ஆதிக்க வெறிக்கு அடிபணிய மறுத்தார். "என் தாய் மொழியிலேயே எடுத்துரைப்பேன் — எழுதுவேன்" என்று சவால் விடுத்தார்.

இந்த உரிமைப் போராட்டத்தின் விளக்கமாக எடுத்துக்காட்டுகள் சில இதோ:—

"கிருட்டிணன் — இலக்குமணன்—சீனிவாசன்— ஆகிய இவைகள் மூன்று நபர்களைக் குறிக்கும் பெயர்கள். இவை வடமொழி பெயர்களாக இருப்பினும் தமிழ் வரிவடிவமாக்கப்பட்டுள்ளன. "இம்முறைப்படிதான் நடப்பேன்" என்பதுதான் "மசாரிக்"கின் வாதம். "கிருஷ்ணன் — இலக்ஷமணன் — ஸ்ரீநிவாஸன்" இப்படியாக சமஸ்கிருத வரிவடிவிலேயே அன்னிய மொழி ஆதிக்கம் வெளிப்படுவதாகவே அர்த்தம் ஏற்படுகிறது. இம்முறையாக அதாவது ஜெர்மன் பாணியிலேயே உச்சரிப்பும், வரிவடிவமும் இருக்கவேண்டுமென்பது அந்த ஆசிரியரின் விடாப்பிடியான எண்ணம்.

> "பிறமொழி சொற்களானலும் கூட அவற்றை என் தாய் மொழியிலேயே ஆக்குவேன்—இக்கட்டுப் பாடு உணர்ச்சி என்னை ஈன்றெடுத்த தாய் இன்னமுதோடு எனக்கு ஊட்டியது—அந்தத் தாயே வந்து தடுத்தாலும் எந்தாய் மொழியை இழிவாக்கிட என்றும் எப்போழுதும் உடன்பட மாட்டேன். இது உறுதி"

எனத் திட்டவட்டமாக கூறிவிட்டார் தாய்மொழியின் உயர்வு அறிந்த இந்த தன்மான மாணவமணி.

இச் சுயமரியாதை உணர்வின் முரசொலியே "மசாரிக்"கிற்கு தோழர்கள் பலரைத் தேடி தந்தது அங்கே.

காட்டு வழி மார்க்கத்திலே, வழித் துணையாக ஒருவர் கிடைத்துவிட்டால் வழிப்போக்கனுக்கு எவ்வளவு தெம்பு—எத்துணை இன்பம்—ஏற்பட்டு விடுகிறது! பொழுது போவதும்—நடைதூரம் கழிவதும்—கூட தெரியாதல்லவா? ஒருநாள் பயணம்—ஒரு ஊர் பிரயாணம்—இவைகளுக்கே இது தேவைப்படுகிற பொழுது வாழ்நாட் பிரயாணத்திற்கு எத்தனை எத்தனையோ வழி துணைகள் வேண்டியதாகத்தான் இருக்கின்றன மனிதனுக்கு!

இதில் பள்ளி வாழ்க்கையில் பக்குவமான நண்பர்கள்—பகுத்தறிவுத் தோழர்கள்—கிடைப்பது பெரிய மகிழ்ச்சி மன்ற வாழ்விற்கு அடிப்படை அமைப்பதாகவே அழகு பெறும்.

நற்குண பண்புகள் நிறைந்த நல்ல தோழர்களே கிடைத்தனர். அவர்கள் தம் அன்பை—பழக்கத்தை—நளினமான முறையில் காலம் காலமாக போற்றி வளர்க்க "மசாரிக்" என்றும் தவறியதேயில்லை.

# 8. விசாரணையும்—வெளியேற்றமும்

மற்றொருநாள்—"மசாரிக்கின்" இரண்டாம் போர் முனை துவங்கிய நாள்—மாற்றத்தைப் படைக்கும் சீர் திருத்தச் சூறாவளி சுழன்றெழுந்த நாள்.

கல்லூரி பூராவும் இதே பேச்சு: "இன்று "மசாரிக்" கின் விசாரணையாமே! தலைமை அதிகாரியின் தண்டனைக்கு பாவம் "மசாரிக்" ஆளாவானே!"

விசாரணைக் கூடம்—விரிவான மண்டபம்—கல்லூரி முதல்வர் தலைமை ஆசனத்திலே அமர்ந்திருந்தார்—"மசாரிக்" கொண்டு வரப்பட்டார்—குற்றவாளியாக—கற்றோர் முன்னிலையிலே—கர்வம் கொண்டோர் எதிரிலே—கைகட்டி நிறுத்தி வைக்கப்பட்டார்.

வழக்கு விசாரணை ஆரம்பமாகியது.

"பாவ மன்னிப்புக் கேட்க பாதிரியாரிடம் வாரமொருமுறை போக மறுக்கிறாயாமே?"

குற்றச்சாட்டை எடுத்துக் கூறியவர் "சமாதானம் என்ன?" என்பதை கூறும்படி கட்டளையிட்டார்.

"மசாரிக்" ஏதும் பேசவில்லை. அவரது சிந்தனை இனம் தெரியாத இடத்தில் சுற்றி அலைந்து கொண்டிருந்ததோ என்னமோ?

"இந்த குற்றத்தை செய்தாயா? இல்லையா?" பிரின்சிபால் பெருங்கோபத்துடன் கூக்குரலிட்டார்.

"ஆம்............!" அமைதியாக—நிறைகுடத்தின் தெளிநீரின் அடக்கமாக—பதில் அளித்தார் அப் பகுத்தறிவின் பாதுகாவலர்.

"பாவ மன்னிப்பு பெருத பாவி! அடியார்களின் வழி வழிவந்த பண்பாட்டை புறக்கணித்த துரோகி! கல்லூரி நடைமுறை விதியை மீறி நடந்திருக்கிருய்!"

"மீறி நடந்திருக்கிறேன்! ஆமாம்!........மீறி நடந்திருக்கிறேன் அஞ்ஞான இருளிலிருந்து........! இது உண்மை.......இதை இல்லையென்று மறுக்கப்போவதில்லை நான். இல்லை நானும் எத்தனை காலத்திற்குத்தான் என் உணர்வில் படுவதை—என் பகுத்தறிவால் தெளிவதை—இப்படிக்கு வெளிக்குக்கூட சொல்லாமல் அடங்கிக் கிடப்பது? இந்த இழிவான நிலையை இனியும் பொறுத்துக் கொண்டிருக்க சகிக்கவே........"

"முடியாது தான்! ஏய்! "மசாரிக்" வரம்பு கடந்து பேசுகிருய்!....நான் திட்டமாக இங்கே கட்டளை யிடுகிறேன்........வாயை யடக்கு........!"

"வாயை அடக்கினல்........எப்படி ஐயா....வார்த்தை வெளிவரும்? குற்றம் சுமத்தப்பட்டவன் கூற விரும்புகிற சமாதானம் வெளிக்கு வரவேண்டாமா? இதிலும் அடக்கு முறை யென்ருல் எதற்கு இந்த விசாரணை மாய்மாலம் எல்லாம்? பேசக்கூடாது என்று என்னை தடுப்பது...........''

"யார் என்றுதான் நான் கேட்கிறேன்? இதுதான் உனக்கு விளங்கவில்லை. பேசு—நன்ருக பேசு—நயமாகவும் பேசு—உரமாகவும் பேசு. ஆனல் உன்

பேச்சு மட்டும்........"நான் கூறும் சமாதானம் எல்லாம் மறதியாய் நடந்துவிட்டேன். இனி இப்படி யெல்லாம் நடக்க மாட்டேன். எனது அறியாமைக்கு மன்னித்து விடுங்கள்" என்ற முறையில் தோரணையில்தான் இருக்க வேண்டும். குற்றம் புரிந்ததற்கான சூழ்நிலை ஏற்பட்டதைப் பற்றி வேண்டுமானால் விளக்கிப் பேசு—விவரமாகப் பேசு........"

"பேசுகிறேன்........ஐயா........பேசுகிறேன். இந்த அளவிற்காவது எனது உள்ளத்தின் உண்மையை எடுத்துக் கூற அனுமதி அளித்தீர்களே அதுவே போதும். நான் உங்களை கேட்பது எல்லாம் இதுதான். எவருமறியாத இருட்டு வேளையிலே திருட்டுத் தனமாக தேவடியாள் வீடுதேடிப் போனேனா? பத்தினிப் பெண்டிரைப் பார்த்துப் பல்லைக் காட்டினேனா? பதைபதைக்கும் பட்டினி உருவங்களை மறந்துவிட்டு அவர்களை வாட்டி வதைத்து பகற்கொள்ளையடித்து பங்களா கட்டிவிட்டேனா! கல்வி நிலையங்களின் காவலர்கள் என்று கூறிக் கொண்டு அங்கே "கன்னக்கோல்" நாடகம் நடத்துகிறேனா? ஆலயங்களின் அரும்பணிகளுக்கு அண்ணல் என்ற பட்டம் புனைந்துகொண்டு உள்ளுக்குள்ளே ஊதாரித்தனங்களுக்கு உறைவிடம் அமைத்தேனா? மாமிசங்களை விலாப்புடைக்க உண்டு—மது மயக்கத்திலே மிதந்து—மங்கையர்களை மடியிலே கிடத்தி—மந்தகாச லீலைகள் புரிந்தேனா? எதற்காக பாவ மன்னிப்பு எனக்கு? நெஞ்சிலே—நினைவின் சுழியிலே கூட கிஞ்சித்தும் வஞ்சக எண்ணமில்லாத நான் ஏன் பாவ மன்னிப்புப் பெறப் பாதிரியாரிடம் போக வேண்டும்? பாவம் செய்ய கனவிலும் கருதாதவனுக்கு பாவ—புண்ய போதனை வீணாகத் தரும் வேதனை........"

"சோதனைக்கு ஆளாகப் போகிறாய் பாதிரிமாரைப் பழித்துப் பேசினால்........மேலும் மேலும் பேச்சைக் கொட்டி........"

"ஏசாகே என்றால் எழுச்சியுற்ற என் பகுத்தறிவு கேட்க வேண்டுமே! பாவங்கள் செய்த மனிதர்களுக்கு பாவமன்னிப்புச் சீட்டுகள் கொடுக்க பாதிரிமார்கள் என்ன பரம பிதாவின் பாராளு மன்றத்தின் பிரதிநிதிகளா அல்லது பேரப் பிள்ளைகளா? பூமிக்கும் பரமண்டலத்திற்குமிடையே ஏனிந்த தரகர்கள் இருக்க வேண்டும்? பாவத்தைப் போக்கி மனிதனை புனிதனாக்கிடும் அதிகாரம் பாதிரிமாருக்கு உண்டெனில் பின்னர் ஆண்டவன் இருப்பானேன்? பாரினில் வாழும் பாதிரிமார்களே போதுமே பரம பிதாக்களாக வீற்றிருக்க! இப்புண்யவான்களையே கோவில்களில் வைக்கலாமே கொலு...............!"

"குதர்க்கவாதம் பேசுகிறாய்..................நாத்திகம் பேசும் நாக்கை நறுக்கி..............."

"நறுக்கி விட்டால் மட்டும் நானிலத்திலே நடமாடும் பாதிரிகளெல்லாம் நல்லவர்களாகி விடுவார்களா? அப்படியானால் என் நாக்கை மட்டுமல்ல எனது உயிரையே தருகிறேன்."

இதற்கு மேலும் கேட்டுக்கொண்டே யிருக்க முடியுமா என்ன? கல்லூரி முதல்வருக்குக் கோபம் குமுறியடித்துக் கோபுரத்திற்குத் தாவியது. தகாத வார்த்தைகளைத் தூக்கி எறிந்தார். அடியாட்களைக் கொண்டு அடித்து விரட்டப் போவதாக அச்சுறுத்தினார்.

ஆனால் "மசாரிக்" தன் நேர்மையையும் ஒழுக்கத்தையும் உரையாடல் மூலம் உறுதிப்படுத்தி விட்டார் அல்லவா? அவரது கொள்கையின் பரந்த நோக்கமே இதுதானே! பகுத்தறிவின் முடிவை வெளியிட எங்ஙனமும் பயப்படக் கூடாது. அலைமோதி நின்ற ஆவல் பூர்த்தியாகி விட்டது.

இனி தன்னை யாரும் கை தொட்டு வெளியேற்றும் முன் — வேதனை தருவதற்குள் — நகர்ந்துவிட

வேண்டும். இதற்குள்ளாக கல்லூரி முதல்வரின் வாய் முணுமுணுத்தது. அவ்வளவு தான். முரட்டு ஆட்கள் மூவர் "மசாரிக்"கை நோக்கி முன்னேறினர். சிறிதே நேரம்—சிந்தனை சுழலோட்டத்தில் திளைத்தார்—திடீரென அங்கே ஒரு மின்வெட்டு—மறு விநாடி கணப்பு மாடத்திலே கன கனவென்று பொரிவிட்ட சூட்டுக் கோல் கண்களில் பட்டது. சடார் என பாய்ந்து அதை கையில் எடுத்து, தன்னை முன் நோக்கி வந்தவர்களை வெருட்டிவிட்டு வெளிக் கிளம்பினர் அங்கிருந்து.

"புருனோ" கல்லூரியை விட்டு வெளிவந்த அதே நேரத்திலே பிரஷ்யாவுக்கும் ஆஸ்திரியாவிற்கும் ஓர் குட்டிப்போர் நடந்தது. ஏழு வார காலம் இப்போர் நிகழ்ந்தது.

இப்போரில் ஆஸ்திரியப் படைகள் பின்னடைந்து வர வர பிரஷ்யப் படைகள் துரத்திக்கொண்டே வந்தன—'மசாரிக்' தங்கியிருந்த ஊரை நோக்கி.

பகைவராக இருப்பினும் ஆபத்து நேரிடும்போது கை கொடுத்து காப்பது தவறல்ல என்ற உத்தமமான வாழ்வின் உயர் தருமத்தை கடைப்பிடித்து இங்கே நடந்து காட்டினர். அவரது கண்யத்திற்கும்—நுண்ணறிவிற்கும் சிறந்தவொரு எடுத்துக் காட்டாகவே இந்த நிகழ்ச்சி விளக்கம் காட்டுகிறது.

பிரஷ்யப் படைகளை விரட்டியடிக்க நூதனமாக வழியொன்று கண்டார். "இங்கே வாந்திபேதி நடக்கிறது" என்று ஊரின் எல்லைகளிலுள்ள வீடுகளில் பொது மக்களுக்கும்—அயலூர் பிரயாணிகளுக்கும் தெரிவிப்பதுபோல அறிவிப்புகளை தீட்டி வைத்து விட்டார் இரவோடு இரவாக.

மறுநாள் அதிகாலை ஊரை நெருங்கி முன்னேறிய பிரஷ்யர்கள் இதைக் கண்டவுடனே தலைதெறிக்க ஓடிப் பின்வாங்கினர்.

இந்நிகழ்ச்சிக்குப் பின்னர் போர்ப் படையில் சேரவேண்டுமென்று ஆவல் பிறந்தது. ஏன் எனில் அன்று அந்த ஊர் மக்கள் மன்றம் அவரது நுண்ணறிவின் சிறப்பை வாய் நிறைய புகழ்ந்து பேசினர். "பெரிய ராஜ தந்திரி—போர்முனை நிபுணன்" என்றெல்லாம் புகழ்மாலை சூட்டினர். இந்நிலைமையில்தான் ஏன் இப்படியே போர்ப் படையில் சேரக் கூடாது என்ற எண்ணம் ஏற்படாமல் இருக்குமா? என்றாலும் அதற்காக தனி பயிற்சி பெறவேண்டுமே என்ற நினைப்பால், அந்த ஆசை அப்போது ஈடேற வசதியில்லாமல் போனது.

வேலையும்—படிப்புமின்றி வீதிகளில் அலைந்தார் வயிற்றைப் பிசைந்துகொண்டு! "வேலை தாருங்கள்—வியர்வையைத் தருகிறேன்" என்று வேண்டினர். கண்ணீர் உகுத்து கருணை கேட்டார்.

பொதுக் காரியங்களில் ஈடுபட்டு உழைக்கிறவர்கள் இப்படி போர்க்கற்று அலையவேண்டும் என்பதுதான் வரலாற்று வழக்கமா? பெயரும் புகழும் பெரிதாகத் தான் இருக்கும். ஆனல் வாழ்வோ வாடி வதங்கி சுருண்டு கிடக்கும். ஏதோ அல்பசொல்ப உதவி அங்கும் இங்கும் தொட்டுத் தொடாமல்—பட்டுப்படாமல்—கிடைக்கும். அவ்வளவுதான். இப்படிக்காண பொது நல ஊழியர்கள்—தலைவர்கள்—பெரும்பாலும் தங்கள் அறிவை விட — திறமையைக் காட்டிலும் — மக்களை சிறப்பாக நண்பர்களை தான் பெரிதும் நம்பி இருப்பது இயல்பு.

"மசாரிக்" வழியும் அவ்வாறே இருந்தது.

கடைசியாக பழைய நண்பரான போலீசு அதிகாரி அவருக்கு ஆதரவுஅற்ற நேரத்திலே உற்ற துணைவராக உதவினர். தன் மகன் பள்ளித்தேர்வில் முதன்மையாக தேறியதற்கு மூல காரணமே "மசாரிக்"

தான் என்பதை மனமார உணர்ந்தார். அபிமான அன்பு மாருமல் உதவிபுரிய முன் வந்தார்.

ஆஸ்திரியத் தலைநகரான "வீயன்னுவுக்கு" மேல் படிப்புக்காகச் செல்லும் தன் மகனுடன் "மசாரிக்கை யும்" அனுப்பி வைத்தார். அவரையும் பல்கலைக்கழ கத்தில் சேர்த்தார் தனது செல்வாக்கைப் பிரயோ கித்து.

அங்கே சீமான் வீட்டு செல்லப் பிள்ளைகளுக்கு வீட்டு வாத்தியாராகவும் ஆக்கி வைத்து வாழ்க்கை வசதிக்கு வழியும் பண்ணிக் கொடுத்தார்.

# 9. டாக்டர் பட்டம்

ஆஸ்திரிய—ஹங்கேரியக் கூட்டரசின் தலைநக ரான "வீயன்னுவுக்கு" வந்தது "மசாரிக்கின்" விசால மான அறிவு மேலும் விரிவடைவதற்கு வாய்ப்புக் கிடைத்தது என்றே சொல்ல வேண்டும்.

"வீயன்னு" எத்தனையோ நாட்டு மக்கள் வந்து குழுமும் சந்தை! அறிஞர்களும்—புலவர்களும்—அதி காரிகளும்—அவைகளும்—கழகங்களும் - கல்லூரிகளும் —நூல் நிலையங்களும்—நிறைந்த அம்மாநகர் உலகத்தை உணர்த்தும் திறவுகோலாக அமைந்தது அவருக்கு.

"பள்ளிப் படிப்பு புள்ளிக்குதவாது" என்றே கருதினர். பாடத்திட்டம் வகுக்கப்பட்டுள்ள முறை ஒரு மாணவனை அறிவாளியாகவோ-சுயமாகச் சிந்தித்து முடிவு காணும் ஆற்றல் உள்ளவனுகவோ — நாட்டுப் பற்றுடையவனு கவோ—ஆக்காது என்பதை ஐயமற அறிந்திருந்தார். பாடங்களை நெட்டுருப்பண்ணி குறைந்த அளவு மார்க்குகள் வாங்கி பரீட்சையில் தேறினல் போதும்

என்ற எண்ணமே மாணவர்களுக்கு இருக்கிறது என் பதையும் உணர்ந்தார்.

உலகப் பொது அறிவைப் பெற பள்ளிப்பாடம் மட்டும் உதவாது எனத் தெரிந்து நூல் நிலையங்களுக்குச் சென்று பழஞ்சுவடிகள் முதல் புதுமை நூற்கள் வரை ஆராய்ந்தார்.

ஏற்கனவே அவருக்கிருந்த மதஆராய்ச்சி மூலமாக வும்— 'அரிஸ்டாடில்' 'பிளேட்டோ' 'கான்ட்' 'கதே' — ஆகிய அறிஞர்களின் நூற்களை ஆராய்ந்து படித்ததன் வழி யாகவும்—'தர்க்கம்' 'வேதாந்த விளக்கம்'—'தத்துவம்' ஆகிய துறைகளில் விற்பன்னரானார். அறிவுத் துறை களில் எல்லாமறிந்த ஞானியாகும் முயற்சியில் ஈடுபாடு கொண்டார்.

ஒருவன் உண்மையான நாகரிக முதிர்ச்சி அடைய வேண்டுமெனில் பாகுபாடின்றி பல மொழிகளையும் பயில வேண்டுமென்பதே அவரது கருத்து.

'செக்' மொழி தாய்மொழி — ஜெர்மானிய மொழி. சமூக, அரசியல் விவகார மொழி—ரஷ்யமொழி, அவரது இனமான "ஸ்லாவ்" இனத்தைச் சேர்ந்த ஒரு வகுப் பினர் பேசும் மொழி—ஆங்கிலம் புது உலகத்தின் நாகரிக மொழி—ஆகவே இம்மொழிகளில் எல்லாம் அவர் கற்று தேர்ச்சி அடைந்தார் காலத்தின் வளர் விலே.

எம்மொழி ஆதிக்கத்தை அடியோடு வெறுத் தாரோ, அம்மொழியிலேயே தனக்கென ஒரு தனி நடையுள்ள எழுத்துவன்மை நிறைந்த அறிஞரானார்.

உள்ளத்திலே குமுறல் கூத்தாட வாடும் மக்கள் என்றுமே—வெறுமனே—குந்திக்கிடக்க மாட்டார்கள்.

'செக்' மக்கள் தங்கள் கிளர்ச்சியின் மறு உருவங்க ளாக அவைகளும்—கழகங்களும் அமைத்துக்கொண்டு

தான் இருந்தார்கள்—செயல் கொண்டுதான் மிளிர்ந் தார்கள்.

"செக்கோல்" என்ற பெயருடைய உடற்பயிற்சி அரங்குகளில் இளைஞர்கள் பெருந்திரளாய்க் கூடி 'போர்முறை' பயின்றனர். எதிர்காலத்திலே வந்துதீரும் என்று எதிர்பார்க்கும் இனப்போராட்டத்திற்கு தங்களைச் சித்தமாக்கிக் கொள்வதில் சிறப்பான உணர்வு காட்டினர்—கவனம் செலுத்தினர். தங்களது சொந்த பெயர்களையெல்லாம் 'செக்' இலக்கியங்கள் செப்பும் சிறந்த வீரர்களின் பெயர்களாக மாற்றிக்கொண்டு சீலம் பெருக்கினர்.

இத்தகைய தன்மான இயக்க நடவடிக்கைகளில் முழுப்பங்கு பெற்றார் "மசாரிக்."—விரைவாக "வீயன்னு" நகரத்து 'செக்' வாலிபர்களின் தலைவராகப் பதவி பெற்றார். பல பத்திரிகைகள் அவரது எழுத்தோவியங்களை பெருமையுடன் பிரசுரித்தன. கட்டுரைகள் பற்பல தீட்டி 'செக்' நாட்டின் களங்கம் போக்கினர்.

"விளாட்டிஸ்மல்" என்ற 'செக்' இலக்கிய வழக்குப் பெயரை தனக்குப் புனைப்பெயராக வைத்துக்கொண்டு —வைரிகள் வெலவெலத்துப் போகுமாறு வண்ணம் மிகும் சொற்சித்திரங்கள் அநேகம் வரைந்தார். அவரது சொல்லாக்கம் 'செக்' இல்லங்கள் தோறும் சுறுசுறுப்பைக் கிளப்பி—இனப்புயலை எழுப்பிவிட்டது. முற்போக்கு எண்ணம் மூலைமுடுக்குகள் எல்லாம்—பட்டித் தொட்டி எங்கும் படர்ந்துபெருகிற்று. "விளாட்டிஸ்மல்" என்றால் ஜெர்மானியச் சூரர்களுக்கு சிம்ம சொப்பனம்!

இதற்கிடையில் அவருடைய கல்லூரிப் படிப்பு முற்றுப்பெற்றது.

அவருக்குப் பட்டமளிப்பதில்கூட மதவாதிகளும் —"ஆஸ்திரிய" அதிகாரிகளும் இடைஞ்சல் செய்தனர் இப்போது. 'செக்' முன்னேற்ற இயக்கத்திலே அவர்

தீவிரப் பங்கெடுத்துக்கொண்டதால் நேர்ந்த இடையூறு தான் இது.

என்றாலும் 1876 - ஆம் ஆண்டு பல்கலைக் கழகத் தார் ஒருவிதமாக மனந்தேறி—கருணை கூர்ந்து — "டாக்டர்" பட்டம் வழங்கினர் அவருக்கு.

அடுத்து வேலை தேடும் படலத்தில் இறங்கினர். பிரபுக்களின் பிள்ளைகளுக்கும்—சீமான்களின் சுற்றத் தாருக்கும்—தான் அங்கு சர்க்கார் உத்தியோகங்கள் கிடைக்குமே யொழிய, ஏழை வண்டியோட்டியின் மகனுக்கா வெளிநாடுகளுக்குச் செல்லும் ஸ்தானிக அதிகாரப் பிரிவில் வேலை கிடைக்கும்?

மீண்டும் அப்போலீஸ் அதிகாரியே 'மசாரிக்கின்' குறையைத் தீர்க்க முன்வந்தார். "உயிர் காப்பான் தோழன்" என்ற முதுரைக்கு மூத்தாய்ப்பு வைக்கும் பிரியமானவராக அவர் விளங்கினர். சமயம் அறிந்து— சந்தர்ப்பம் தெரிந்து — சூழ்நிலை கண்டு—அன்பனை கைதூக்கி விடுவதுதானே தோழரின் கடமை. இந்த நற்குணத்தைக் கடமையாகக் கொண்டு போற்றினர் அவர். கல்லூரி விரிவுரையாளர் பதவிக்கு ஏற்பாடு செய்யவேண்டி தனது மகனுடன் "லீப்சிக்" நகரத்துக் கனுப்பி வைத்தார்.

பதவி கிடைக்கும் என்ற தருணம் வரும்போது திடீரென்று அவரது வாழ்வுச் சக்கரத்தின் சுழற்சி வேறு பக்கம் திரும்பிற்று.

---

# 10. காதல்

"லீப்சிக்" நகர்! "மசாரிக்கின்" மனத்திலே காதல் அமுது பாய்ச்சிய இடம்!

காதல் இடமறிந்து பிறக்கும் நோய் அல்ல—பொதுவாக எளிதில் எவரையும் பீடிக்கும் குபீர் நோய் அல்லவா அது. முற்றும் துறந்த முனிகளைக்கூட இம் மோகனமயமான உணர்வு ஆட்டிப் படைத்து ஆட்கொண்டு விடுகிறதென்றால், 'மசாரிக்' மட்டும் இதில் தப்ப முடியுமா என்ன? மனதை உருக்கும் அம்மயக்கம் அவரையும் அன்றொருநாள் தாவித் தழுவி முத்தம் ஈந்து மகிழ்ச்சி தரும் மலர் இதழ்மேல் மிதக்கச் செய்தது.

அவர் தங்கியிருந்த விடுதியின் சொந்தக்காரி—தலைவியின் அன்பும் ஆதரவும் அவர்பால் நிலைத்திருந்தது. அவள் அவரது முயற்சிகளுக்கு ஊக்கமளித்து வந்தாள்.

அன்று அவளுக்கு வேண்டிய விருந்தாளி ஒருவர் அமெரிக்காவிலிருந்து வருகை தருவதாகவும், புகை வண்டி நிலையத்திற்குச் சென்று அவரை வரவேற்கப் போவதாகவும் "மசாரிக்"கிடம் தெரிவித்து தன்னுடன் வரவேற்பு அளிக்க வருமாறு அழைத்தாள் அவள்.

"லீப்சிக்" புகைவண்டி நிலையம்! அவளும் அவரும் வண்டி வரும் திசையை எதிர் நோக்கி நின்றனர். வீட்டுச் சொந்தக்காரி கூப்பிடுகிறாளே என்ற தோரணையில் மட்டும் வந்திருக்கிறாரே அவருக்கு, வருகிற விருந்தாளியை விரைவில் காணவேண்டுமென்ற ஆவல் அலைபாய நியாயமில்லை யல்லவா?

வண்டியும் வந்தது—நின்றது. விருந்தாளி இறங்கினார். எதிர் கொண்டு அழைத்தாள். மறு நிமிடம்

'மசாரிக்கை'ச் சுட்டிக்காட்டி "இவர்தான் டாக்டர் மசாரிக் 'செக்' பெற்றெடுத்த சிங்கம்" என அறிமுகப்படுத்தினுள் வருகை தந்த விருந்தாளிக்கு. கைலாகு கொடுக்க கை நீட்டினுர் வந்தவர். திகைப்பும் மலைப்பும்—வெட்கமும் ஒடுக்கமும்—பீறிட 'ஏனே தானே' வென்று கையை........? கரங்கள் சேர்ந்தன.

இதயத்திலே ஏனே ஒருமாதிரி புதுவேகம்!—உடலில் இனமறியா ஓர்வித இன்பப் புத்துணர்ச்சி! இது இயல்புதானே! இப்படியொரு இள....எதிர்பாராமல் என்ருலும்........இதுவரை இப்படி கை குலுக்கி அந்த உணர்ச்சி அனுபவம் அறியாதவர்.

ஆமாம்! வந்த விருந்தாளி ஆண் அல்ல—அழகு தவழும் ஆரணங்கு—இளமை குலுங்கும் ஏந்திழை—கட்டுடலாலான காந்தச் சிலை—கருத்தை ஈர்க்கும் கவினுறு வடிவம்—உணர்ச்சிப் புயலை எழுப்பும் ஓவியம்—இப்படி இளமை ததும்பும் காந்த மணியை கரம் பிடித்து........! அவள் பெயர் "காரிக்"

"மசாரிக்" தன் சுய நிலைக்கு வர சிறிது நேரம் சென்றது—அதே விநாடி காதல் வென்றது!

அகத்தினுள் ஆர்ப்பரித்த—ஆன்மாவைத் தழுவிய—காதல் வெள்ளம் கரையைத் தழுவி களிப்படைய காலம்—வாய்ப்பு—சூழ்நிலை—வரவேண்டாமா? அதற்கேற்ருற் போல............!

ஒருநாள் பொழுது போக்குக்காக போயிருந்த இடத்திலே வீட்டுத் தலைவி ஆற்றுத் தண்ணீரில் வீழ்ந்துவிட்டார். அவரைக் காப்பாற்றி வீடு சேர்த்தனர். சிறிது காலம் அவ்வம்மையார் படுக்கையில் கிடக்க நேரிட்டது.

இவ்வாருகத்தானே காலம் — வாய்ப்பு — சூழ்நிலை—அமைந்த பின்னர்........!

இப்போது "மசாரிக்கும்"—"காரிக்கும்" அவ் வீட்டுத் தலைவியை கண் காணித்தனர். அடிக்கடி சந்தித்துப் பேசும் சந்தர்ப்பம் கிட்டியது இருவருக்கும்!

வண்டும் - மலரும், தேனும்—பாலும், தென்றலும்—பூங்காவும், ஒன்றுபட்டால்—ஒருமை கொண்டால்...... முடிவு என்னவா? ஒரே இன்பம்! இன்பம்!!

காதலர் இருவரின் கருத்தும் கவனமும் ஒருமித்தன—உள்ளங்கள் உவப்பால் ஒன்றின—உதடுகள் ஒன்றை ஒன்று உராய்ந்து ஒருமை பேசின—மலர் மேனியும்—வளர்மேனியும் மேவி—காதற் குயில் கூவி—கனிந்த ரசம் பாவி—மகிழ்ச்சி தாவிக் குதித்தது மயக்கத்தின் எல்லைக் கோட்டைத் தாண்டி.

இதுகாறும் புத்தகக் குவியலுக்கு மத்தியிலே புரண்டு புரண்டு — பல்வேறு அரசியல் அலுவல்களிலே உருண்டு உருண்டு—மனச் சோர்வால் அலுத்துக் கிடந்த "மசாரிக்கை" மகிழ்ச்சி செய்யும் மதுவானள் "காரிக்!"

இன்பத்தின் இனிமை வெள்ளத்திலே இறக்கை அடிக்காமல் மிதந்த அந்த நாட்களிலே அவர்கள் இருவரில் ஒருவரும் இதற்கொரு விழுக்காடு—வேதனை—பிரிவு பின்னெருநாள் வரும் என்று மறந்தும்கூட எண்ணியதே இல்லை. இதுதான் காதலர்களுக்கு உண்டான கண்யமான கலையாக—பண்பாக—காலத்தின் அடிச்சுவட்டிலே அமைந்து விட்டதே!

அவர்கள் எதிர் பார்க்காத—நினைக்காத—அந்த நாள் வந்துவிட்டது. இருவரும் பிரிய நேர்ந்தது. இதை போக்கிவிட திருமணம் செய்துகொள்ளத் துடித்தனர். துடிப்பு இருந்தால்மட்டும் துயரம் தீர்ந்துவிடுகிறதா? அலுவல் இல்லாத ஆசாமிக்கு பெண்தர அமெரிக்கப் பெற்றோர்கள் அனுமதி தரமாட்டார்களே! அன்றாட ஜீவனத்திற்கே போராடிப் போராடி வாழும் "மசாரிக்" மண

விழாச் செலவுக்கு எங்கே போவது? தன் மனைவியை வைத்துக் காப்பாற்ற—வாழ்வு அமைக்க—வண்ணம் சிறக்க—வருமானம் அவசியமாச்சே! இது இல்லை என்பதற்காக இருவரும் பிரிந்து விடுவதா? காதல் மலரை கசக்கித்தான் எறிந்துவிடுவதா?

எனவே "மசாரிக்" ஒரு வேலையில் அமர்ந்த பிறகு மணம் புரிந்து கொள்வது—அதுவரை "காரிக்" அமெரிக்காவில் தங்கியிருப்பது—என்னும் உடன் பாட்டின் பேரில் ஒருவரை ஒருவர் பிரிந்தனர், வழிந்தோடும் கண்ணீர் திவலைகளுடன்.

பிரிவிற்கு பின் ஏற்படுவது பெரும் துன்பம் என்ருலும் அதை மாற்றி யமைக்கும் மருந்தாக இன்பக் கனவில் மிதப்பதையே காதலர்கள் கருத்தோடு போற்றுகின்றனர். "மசாரிக்"கும் இவ்வாறு கனவு உலக யாத்திரையில் காலம் தள்ளுகிறபொழுது தான் திடீரென அன்று பேரிடி போன்ற செய்தியொன்று தந்தி உருவில் வந்தது.

' "காரிக்" உடல் நலமில்லாமல் உழல்கிருள் அதன் வாசகம் இதுதான். 'மசாரிக்' அதிர்ச்சியுற்ருர்—அயர்ந்தே போனுர்.

"லீப்சிக்" எங்கே? அமெரிக்கா எங்கே? இடையே எவ்வளவு தூரம்? அடே யப்பா........இத்தனை தூரத்துக்கு அப்பாலே தன் துணைவி துவண்டு கிடக்கிருள். மனம் வைத்த மாத்திரத்திலே சென்று பார்க்கக் கூடிய நிலைமையா? இதற்காக காதலியை காணுதிருக்க முடியுமா? அவர் இதயமென்ன கருங்கல்லா? தன் கையிலிருந்த செல்லாக்காசு முதற்கொண்டு பணத்தை எல்லாம் அரித்துச் சேர்த்து "நியூயார்க்" புறப்பட்டுவிட்டார்.

ஒரு பத்தாம் பசலிக் கப்பலில்தான் அவர் 'அட்லாண்டிக்' பெருங்கடலை தாண்டி அமெரிக்கா அடைந்

தார். அன்றைய நாளிலே பாய்மரக் கப்பலில் புறப் பட்டு பல கஷ்டங்களுக்கிடையே "கோலம்பஸ்" அமெரிக்காவைக் கண்டதுபோல, "மசாரிக்" மாபெரும் தொல்லைகளுக்கு அப்புறம் அமெரிக்க எல்லையைக் கண்டார்.

இத்துணை இடர்களையும் ஏற்று அங்கே சென்ற அவருக்கு........நல்லவேளையாக ஆறுதல் காத்திருந்தது. இவர் போய்ச் சேருவதற்குள்ளாக 'காரிக்' குண மடைந்துவிட்டாள்.

குதூகலம் கோப்பளிக்க கட்டித்தழுவினர் இருவரும்!

அங்கே அவர் நடந்துகொண்ட முறை—"காரிக்" மீது காட்டிய களங்கமற்ற காதல்—நேர்மையான நன்னடத்தை—நீதிபேசும் நாவன்மை—இவை "காரிக்கின்" தாய் தந்தையரை வசீகரித்தன.

அவர்களின் திருமண விழாவிற்குத் திருப்தியுடன் இசைவு தந்தனர். தங்கள் தம் செல்வப் புதல்வி "காரிக்கை" மனக்களிப்புடன் "மசாரிக்கின்" கரத்திலே ஒப்படைத்தனர்.

# 11. இல்லறம்

மணவிழா. மகிழ்ச்சி இல்லறம் மலர்ந்தது. காதல் கடிமணம் பரப்பியது.

தேன் நிலவில் திளைத்தனர். இன்ப இரவுகளில் நீந்தினர். இன்ப ரசம் பருகினர்.

நாட்கள் மாதங்கள் நகர்ந்தன.

எத்தனை நாட்கள் தான் மாமியார் வீட்டு ரொட்டியையும்—வெண்ணெய்யையும் உண்டு வீணாக பொழுதைக் கழிப்பது? உழைப்பிலே உற்சாகம் எப்போதும்

அவருக்கு உண்டு. இப்போது சுகவாழ்வுதான். ஆனால் சோம்பல் நிறைந்தது அல்லவா!

வாழ்விலே—சென்றுபோன நாட்களிலே அவர் என்றென்றும் சுறு சுறுப்பு மிக்க தேனீ!

'நியூயார்க்' நகரிலே ஏதேனும் சேவை ஏற்க எண்ணினார். இயலவில்லை. பண உதவி செய்வதற்கும் மாமனார் தயாராக இல்லை. கடைசியாக மணமக்கள் திரும்பிச் செல்வதற்கான செலவை மட்டும் ஏற்றுக் கொண்டார்.

மணமக்கள் "வீயன்னா" திரும்பினர், புதுமணத் தம்பதிகளாய்.

இல்லறம் எல்லோருக்குமே நல்லறமாக அமைந்து விடுவதில்லை—இருவேறு சக்கரங்களாலான இல்லறச் சகடம் ஏற்ற தாழ்வாக இருப்பின் இன்னலைத் தவிர ஏது பயன்? தலைவன்—தலைவி ஆகிய இருவரும் ஒரு மனத்தினராக ஒத்துப்போனால்—அங்கு இல்லறம் இன்ப சுவர்க்கமாக இயங்கும்—எழில் பெறும்—ஏற்றங் கொள்ளும்.

அன்பும் அறிவும் ஒருங்கே நிரம்பிய "மசாரிக்—காரிக்" எடுத்த எடுப்பிலேயே சீரும் சிறப்பும் சதிராட-சீலமும் செழுமையும் சிந்துபாட - சிக்கனமாக இல்லறம் நடத்த ஆரம்பித்தனர். சிறார் செல்வம் பெற்று சிரித்து மகிழ்ந்தனர். பிறர் பார்த்து பொறாமைப் படக்கூடியவாறு குடும்பம் நடாத்தினர்.

"மசாரிக்"கின் ஆராய்ச்சிப்பணி - அறிவியக்கத் தொடர்பு - பத்திரிகைத் தொண்டு - இவற்றிலெல்லாம் அவரது மனைவியும் துணைபுரிந்தாள். தனக்கிருந்த ஆங்கில அறிவுத்திறனை தன் கணவருக்கு அளித்து—அவரிடமிருந்து 'செக்' மொழியினைக் கற்றாள் அவள். இவ்வாறு ஜோடிப் பொருத்தம் சரிநிகர் சமமானது, கூண்டு வண்டி மயிலைக்காளை இணைப்புப்போல!

ஏழ்மையின் எக்காளத்தை எதிர்த்துப் போரிட்டனர். "வீயன்னு" மாநகரில் சின்னஞ்சிறு அறை ஒன்றில் ஆடம்பரமற்று வாழ்ந்தனர்.

ஆனால் அக்கம்பக்கத்திலுள்ளவர்கள் இவர்களது வெளித் தோற்றத்தை - நடையுடை பாவனைகளை - கண்டுவிட்டு பெரிய செல்வ சீமான் குடும்பமாக எண்ணினர். அமெரிக்கப் பெண்ணை மணந்ததால் தங்கச் சுரங்கமே சீதனமாகக் கிடைத்திருக்குமென்று அவர்கள் கருதினர். பாங்கு முதலாளிகள் தங்கள் பாங்குகளில் பணம்போட்டு வைக்கும்படி கோரினர். ரெயில் பாதை போடுவதற்குக்கூட பணம் உதவுமாறு கேட்டனர். இவர்களின் போக்கும் - பேச்சும் "மசாரிக்கை" சிரிக்கத் தான் வைத்தன. உள்ளே அவர்கள் குடிப்பதோ "கூழ்" ஆனால் வெளியே அவர்களைப்பற்றி அப்படி இப்படியென்று ஒரே அடுக்காக அடுக்கிக்கொண்டு பன்னீர் தெளிக்கிறார்கள்! நல்ல வேடிக்கையல்லவா?

1879-ஆம் ஆண்டு "மசாரிக்" "வீயன்னு" சர்வ கலாசாலையின் தத்துவப் பேராசிரியராகப் பதவி ஏற்றார். ஆஸ்திரிய அதிகாரிகள் வேண்டா வெறுப்பாகவே அதுவும் தற்காலிக நியமனமாகவே ஏற்பாடு செய்தனர்.

இதற்கிடையில் 'செக்' மக்கள் தங்களுக்கெனத் தனியாக ஒரு பல்கலைக்கழகம் வேண்டுமென அரசாங்கத்தாரிடம் கேட்டு கிளர்ச்சி செய்தனர். அவர்களுடைய கிளர்ச்சி 1882-ஆம் ஆண்டு 'பிரேக்' நகரில் வளர்ச்சியுடன் பூர்த்தி பெற்றது கல்லூரியாக! வேறு பல கல்லூரிகளின் அழைப்புகள் அடுக்கடுக்காய் குவிந்துங்கூட மக்கள் குரலுக்கே மதிப்பு தந்தார் "மசாரிக்." முடிவாக 'செக்' மக்களுக்கென்றே தனியாக நிறுவப்பட்ட 'பிரேக்' பல்கலைக் கழகத்தின் பேராசிரியரானார்.

ஒவ்வொரு விடயத்திலும் மாணவர்களுக்கு அக்கறை ஏற்படுத்துதல் - வகுப்பு நேரங்கள் அல்லாத

ஒழிந்த வேளைகளிலும் அவர்களிடையே பொது அறிவை போதித்தல் - பண்டைய ஆசிரியர்களின் இலக்கியங்களுக்கு விரிவுரையாற்றுதல்- "பிளேட்டோ" வின் கருத்துக்களை மாணவர் இதயங்களிலே விதைத்தல்- இவ்வாறு பாடம் போதிக்கும் முறையில் புதுமையைக் கையாண்டார். எதிர்காலத்திற்கு ஏற்றவாறு இளைஞர் களை உருவாக்கும் உலைக்கூடமாக - சிற்பியாக்கும் கலைக்கூடமாகக் கருதினர்.

'செக்' மக்களிடையே விழிப்பு ஏற்பட்டிருந்தது - விவேகம் ஏற்படவில்லை. சிற்சில சமயங்களில் தங்கள் இனம் வேறு என்பதையும் மறந்து ஜெர்மானியரோடு உறவாடி விடுவார்களோ என்ற ஐயம் உதித்தது அவருக்கு. ஆஸ்திரியப் பண்பாட்டின் அடிச்சுவடே இல்லாதபடி - ஜெர்மன் வாடையே வீசாதபடி - வேலி அமைக்க வேண்டும்-ஏற்கனவே படிந்திருந்த ஆஸ்திரிய மாசை உதறி எறியவேண்டும் - என்று எண்ணினர் அவர்.

உண்மையே 'செக்' மக்களின் நாகரிகத்துக்கு உறைவிடம் - உழைப்பே அதை ஊட்டி வளர்த்த உணவு - கட்டுப்பாடே அதன் கட்டுக்கோப்பு - இதனை பொது மக்களுக்கு, சிறப்பாக மாணவ மணிகளுக்கு சிந்தனையில் படும்படி விளக்கி வைத்தார். மூடபழக்க வழக்கங்கள் - போலிப்பக்தி - பொய் சொல்லும் பித்தம் - பாமரரை பதைக்கச் செய்யும் கேவல காரியங்கள் - இனத்தை மறந்து பணத்திற்காக — பதவிக்காக — பவிசுக்காக தாய்மொழியைக் காட்டிக் கொடுக்கும் தரம் கெட்ட போக்கு- இவை அனைத்தும் உயிரை உறிஞ்சும் நஞ்சு வகை என்பதைப் புலப்படுத்தினர்.

வாழ்வின் "லகானுக" உழைப்புத்தான் ஒய்யாரம் பேசவேண்டும் என்பதை தனது மாணவர்களிடம்— தான் சந்தித்த இயக்க ஊழியர்களிடம்—தன்னுடைய

பேச்சைக் கேட்கக்கூடிய பெருமக்களிடம் அறிவுரை வழங்கினுர்.

ஆசிரியர்—மாணவர் தோழமை எவ்வாறு இருத்தல் அவசியமாகும் என்பதற்கு "மசாரிக்கும்" அவரது மாணவர்களுமே தக்கதொரு சான்ருகும்! பிறர் பார்த்து எந்தக் காலத்திலும் பின்பற்றத்தகும் பெருமை வழியாக - முத்தாரம் மினுமினுக்கும் முன்மாதிரியாக - நடந்து கொண்டார்கள்.

இந்த அறிவு மேதையின் வாழ்நாளில் எல்லாம் இந்த காலத்தைத்தான் - இப்போது அவர் நடந்து கொண்ட செயல்புரிந்த கோணத்தைத்தான் - பொன் தகட்டில் வைர எழுத்தாணிகொண்டு வரிவடிவங்களால் சித்திரம் கூட்டவேண்டுமென்று வரலாற்று ஆசிரியர்கள் பலரும் கருதுகின்றனர்.

குடும்பத்தின்மீது கொண்டுள்ள பற்றுதல் - கூடிக் குலாவும் உறவினர் பால்காட்டும் பாசம்- தேடித் திரிந்து தேன் இனிமை சுகம் பெறும் காதலர்கள் தங்களுக்குள் பேணி காக்கும் பிரேமை - இவை எல்லாவற்றையும் தாண்டிய உயிர் இணைப்புடன் தன்னிடம் வந்துபோன அத்தனை மாணவர்களிடமும் பழகினுர் - பயிற்றுவித்தார் - பரவச நிலை தந்தார்.

"என்னிடம் வருடா வருடம் நூறு நூறு - ஆயிரம் ஆயிரம் மாணவர்கள் வந்து போகிருர்கள். இதில் யாரைத்தான் நான் தெளிவாக நினைவில் வைக்கமுடியும். ஏதோ பார்த்த நினைவு இருக்கிறது" என்று பின்னிட்டு பேசிவிடுகிற பேராசிரியர் இனத்தைச் சேர்ந்திருக்க எண்ணவில்லை. "ஊருக்கு பெரிய மனிதர் வீட்டு பையன் - சீமான் குடும்பத்தின் சிவந்த ரோசா—ஆ! அந்த........தங்கமான பையன். அவன் வாழ்வின் - குடும்பத்தின் ஒவ்வொரு முடுக்கும் - திருப்பமும் எனக்கு நன்ருகத் தெரியும். நான் என்ருல் உயிர்தான்........க்கு" என்று ஒருசில உயர்ந்த குடும்பங்களின் - உயரிய

பங்களாக்களின் செல்வக் குழந்தைகளைப்பற்றி பதறிப் பதறிப் பேசும் பாவாணர் கூட்டத்தில் அங்கம்கொள்ள விரும்பவில்லை அவர்.

ஏற்றம், தாழ்வு—இனிமை, கசப்பு—இவை மனித சமூதாயத்தில் இருப்பது மடமை என்பது அவரது பொதுக் கொள்கை. இதை நாடி போற்றுவதற்காக நடைமுறையிலிருந்து வேறுபட்டு நடப்பதைப்பற்றி அவர் ஒருசிறிதும் பயப்படவில்லை - பணியவில்லை - பதறவுமில்லை.

மாணவர் உலகிலே யாவரும் ஒருவரே அவருடைய கண்முன்—சிந்தனைச் சிறப்போட்டத்தின் எதிரில்.

பட்டி தொட்டியோ - பள்ளத்தாக்கில் பணிந்து கிடக்கும் சிற்றூரோ - பங்களாக்கள் அரண் செய்த பரவச பெருநகரோ - அவன் எங்கிருந்து வந்திருந்தாலும் சரி 'மசாரிக்கின்' அறிவு மன்றத்தின் அரவணைப்பிலே பேதாபேதம் கிடையாது- பெருமைக்குச் சிறுமை இருக்காது.

ஒவ்வொரு மாணுக்கனைப் பற்றியும் ஒரு பெரிய நூலே எழுதிவிடத்தக்க விவரங்கள் தெரிவார் - விளக்கங்கள் அறிவார்.

அவர் மாணவர்கள் மீது காட்டிய அக்கறைக்கும் மாணுக்கர்கள் அவர் மேல் கொண்ட அன்பிற்கும் ஒரே ஒரு உதாரணம் ஒளிவீசும் வைரம் போல இதோ: அவரது மாணவர்களுக்குள் ஒருவரான "பிரளஷிங்" என்பவர் 50,000 பவுன் பெறுமானமுள்ள சொத்தை "மசாரிக்" பெயருக்கு உரிமை தந்து பட்டா எழுதி வைத்து விட்டு இறந்தார்.

ஆசிரியர் — மாணவர் கூட்டுறவின் மேன்பாடு தான் என்னே !

---

# 12. தூயவருக்குத் துரோகிப் பட்டமா ?

உண்மையை திண்மையாகக் கடைபிடித்தார். நடு நிலைமையினின்று நழுவாமல் நின்ருர்.

இவ்விதமான விடாப்பிடியான நோக்கமும்— போக்குக்கு தூயவரான அவருக்கு துரோகிப் பட்டத்தைத் தேடிக் கொடுத்தது ஒரு நேரத்தில்.

ஆனல் அப்படிபட்ட இக்கட்டான நேரத்தில் அவர் மனம் மருண்டு விடவில்லை. சேவையே கண்ணயினர். சிரம் தாழாது நடந்தார். தூற்றிய மக்கள் போற்றினர் சிறிதுபின்னலே.

17-ம் நூற்ருண்டில் வாழ்ந்த "ஹாங்கா" என்பவர் பழஞ்சுவடி ஒன்றை கண்டெடுத்தார். அச்சுவடியின் காலம் பற்றிய சர்ச்சை எழுந்தது.

"ஜஸ்மான்"—"பலாட்ஸ்கீ"—"சபாரிக்"- முதலிய அக்கால வரலாற்று ஆசிரியர்கள் அதைப் பழஞ்சுவடி என்றனர். ஆனல் "டோப்ரோவ்ஸ்கீ" என்ற அறிஞர் அதன் காலத்தைக் குறித்து ஐயங்கொண்டார்.

வெறும் வாயை மெல்பவருக்கு ஒருவாயவல் போதாதா? அச்சுவடியின் பழமையை மறுத்ததோடு, அது கண்டெடுக்கப்பட்ட விதம் பற்றி கிண்டல் செய்தனர் ஜெர்மானியர். தாங்கள் கண்ணெனப் போற்றிய அது பழமையானதல்ல என்று கண்டனம் செய்வதைக் கேட்டு மனம் பொறுமினர் 'செக்' நாட்டினர்.

அப்போது 'மசாரிக்' 'செக்' கலைக்களஞ்சியத்தின் பதிப்பாசிரியராக நியமிக்கப்பட்டிருந்தார். அச்சுவடிபற்றிய சச்சரவைக் கண்டு வாளா விருக்க முடியுமா அவரால்!

அகச்சான்று—புறச்சான்று இவற்றை அடிப்படையாகக்கொண்டு ஆராயுமிடத்து அச்சுவடி 'போலி' எனத் தோன்றியது. இவ்வுண்மையை ஒளிக்காது எடுத்துரைத்தார்.

தம்இனப் பெருமையை தலை தாங்கி நிற்க மலை உச்சி நிகர்ந்த உண்மையை நாற்களே வேண்டும். பழைமை என்று பொய்க்காக போலிவேடம் புனைவது கூடாது என்பதே அவரது அறிவுரை.

ஒரு 'செக்' இனத்தவன் தங்கள் உயிர் போன்ற சுவடியை போலி எனப் பேசுவதைக்கேட்டு 'மசாரிக்' மீது அடங்காச் சினங்கொண்டனர்—சீறினர்—"சீ! தூ!" என வைதனர்.

கடும் சொற்போர்-கர்ண கடூர எழுத்துப் போராட்டம்—இவைகளை ஒன்றை ஒன்று தொடர்ந்தன—பலத்தன.

"மசாரிக்" துரோகி எனத் தூற்றப்பட்டார்.

கம்பராமாயணத்தை தீயிட்டுக் கொளுத்துவோமென தமிழகத்திலே சீர்திருத்த இயக்கத்தினர் சூள் உரைத்தவுடனே துரோகிகள் என்று தானே அவர்களும் பட்டம் சூட்டப்பட்டனர். தமிழரின் மதிப்பைப் போக்கும் — மானத்தை வாங்கும்—மாருட்ட ஏட்டை பழமையான காவியம்—கலைக்களஞ்சியம்—மொழியாக்கத்தின் அமுதம் என்று போலிக் கூப்பாடு போடவில்லையா? இதுபோலவே "மசாரிக்கின்" அன்றைய நிலையும். எந்த மக்களின் உய்வுக்காக—உயர்விற்காக-உழைத்தாரோ அவர்களே இன்று "ஊதாரி—ஊரை எதிர்ப்பவன்—உண்மையை மறைப்பவன்" என்றெல்லாம் வசைமாரி பொழிந்து "துரோகி"ப்பட்டம் சூட்டினர்.

இப்புயல் ஓய பல நாட்கள் ஆயின.

தன்னைப் புறக்கணித்தாலும்—பகைத்தாலும்—அவர் பொருட்படுத்தாமல் தனது தூய்மையான பாதையிலேயே துணிந்து நடந்தார்.

மக்களின் மாறுதல் கண்டு மனம் சோர்ந்தாரா "மாசரிக்"? உண்மை உணர்வு அவர்கள் சிந்தனையில் அமுதநீர் சுரக்கும்வரை அவர்கள் அப்படித்தான் பேசுவார்கள்—எழுதுவார்கள்—நடப்பார்கள் என்பதை நன்கறிந்திருந்தார்.

இருந்த மலை போன்ற எதிர்ப்பையெல்லாம் அவர் துச்சமாக கருதியதற்கு இளைஞர்கள் தந்த இடையரு ஆதரவுதான் காரணமாகும். இளைஞர் பெரும் படையினர் அவரை தங்களின் ஏக தலைவனாக—தந்தையாக—தளபதியாக ஏற்று போற்றினர்.

அவரது மூச்செல்லாம் பேச்சாக மாறி—கல்லடிக்கும் சொல்லடிக்குமிடையே கலங்காது நின்று தொண்டாற்றினர்.

இந்த சின்னதுகளை வைத்துக் கொண்டு இவர் செய்வார் என்றே சில அறிஞர்கள் — அனுபவசாலி கூட சோதிடம் கணித்தனர். ஆனல் அது வெறும் சொக்கட்டான் ஆட்டமாக பொய்த்துப் போனது. அடங்கா ஆர்வம்—மடங்கா இனப்பற்று-இவை அவருடைய கத்தியும் கேடயமுமாகும். இளைஞர் பெரும் படையின் அணி வரிசை அசைக்க முடியாத அரணானது.

> "வர வர ஒன்ருய் நெருங்கி ஒற்றுமைப்படுவதே நம் தொண்டின் லட்சியமாக இருக்க வேண்டும்—காலங்கடத்தக் கூடாது—நேரம் போக்க ஆகாது—ஏனென்ருல் நமக்கு எதிராக வேலை செய்யும் நம்மவர்களோ அறிவுத் திறமையாலும் — ஆக்க வலிமையாலும் — "சைத்தான" வளப்பத்தில் வரிந்துகட்டி நிற்கின்றனர். காலம் பார்ப்பதற்கு இப்போது

நேரமில்லை. ஒன்று திரண்டு செயல்புரிவதே வேண்டும்" என்று நாடெங்கும் முழக்கம் செய்தார். "கருத்து வேற்றுமையைக் களைந்தெறியுங்கள். பொறாமையை அகற்றி விடுங்கள். நான் இருக்குமிடத்தில் வேறு யார் இருந்தாலும் எனக்குச் சம்மதமே. ஆனால் அவர் "செக்" சிங்கமாக இருக்கவேண்டும். ஒரே முகமாய் ஒன்றுபட்டு போராட முன்வாருங்கள்" என்று இலட்சிய முரசு முழக்கினர்.

அவரது கொள்கை 'மெய்யுணர்வு' என்ற பெயருடன் வழங்கலாயிற்று.

இத்தனை முறையீடுகளுக்கு அப்பால் தான்—இளைப்பாற இடைவெளியில்லாத பிரச்சாரத்திற்கு அப்புறம்தான்—இருக்காமல்—நிற்காமல் - சுற்றிச்சுழன்று சூறுவளி சுற்றுப்பிரயாணம் நடத்தியதற்கு பின்னிட்டு தான்—"செக்" மக்கள் உண்மையை உணர ஆரம்பித்தனர். புயலுக்குப்பின் அமைதி அரவணைத்தது "செக்" இனத்தை.

தவறைத் தவறென்று ஒப்புக்கொள்வதே மெய்யான வீரம் என்பதை ஏற்றுக்கொண்டனர்—"செக்', நாகரிகத்தின் சிறப்பினை ஒரு பொய்யைக் கொண்டு மெய்ப்பிக்க அவசியமில்லை என்ற "மசாரிக்கின்" நியாயவாதத்தை—நீதியின் நேர்மையை-நெஞ்சார ஒப்பினர்.

மக்கள் மனம் மாறிற்று—"மசாரிக்" புகழ் மணமணத்து பரவியது நாடெங்கும். "எம் தலைவர்—எங்கள் தந்தையார்—ஏழை எளியவரின் "அண்ணு" ஏக்கம்மிக்கோரின் தளபதி—சீர்திருத்தப்புரவலர்-சிங்கார பாவலர்—" இப்படி பற்பல பட்டங்களை — புனைப் பெயர்களை-சூட்டி முன்பு தீட்டிய துரோகிப் பட்டத்தை தூக்கி எறிந்தனர்.

அவர் உதடு அசைந்தால் ஊரே தலை வணங்கும் -வாய் திறந்தால் வாலிப வர்க்கம் வரிசை வரிசையாக

அணி வ்ளர்க்கும்-கரம் அசைத்தால் கருத்தின் சீலம் மிக்க செம்மல்கள் கை கட்டி நிற்பர்-நடை நடந்தால் நாடே பின்தொடரும் நயமாக.

# 13. பாராளும் மன்றம்

1890-ம் ஆண்டு "மசாரிக்" முதல் தடவையாக ஆஸ்திரியப் பாராளும் மன்ற உறுப்பினராகத் தேர்ந் தெடுக்கப் பட்டார், மக்களின் பெருமித ஆதரவுடன்.

இம் மக்கள் சபையிலே விவாதத்திற்கு வரும் மசோ தாக்களை நுணுக்கமாக ஆராய்ந்து உண்மையை விளக்கி — போலித்தனமான வாத பிரதிவாதங்களை நொறுக்கி—ஆட்சி பீடத்தாரின் அக்ரமங்களைத் தாக்கி — ஏழை எளியவர்களின் ஏக்கத்தைப் போக்கி — சூழ்ச்சி, சுயநலம், சதி ஆகியவைகளை சுக்கு நூறுக்கி— அடாத செயல்களால் அவதியுற்ற மக்களுக்கு நிவார ணம் வழங்கி—செயல்கள் புரிந்தார். சேவைகள் செய் தார்.

பாராளுமன்றப் பணியின் போது நீதிக்கு நிலைக் களமாய்—நேர்மைக்கு உறைவிடமாய் — தொண்டுகள் புரிந்தார் என்பதற்கு அருமையான இருபெரு ஆதாரங் கள் உண்டு.

முதலாவது இது :

தனக்கென ஒரு தனி நாடின்றித் தவித்து — நாடோடிகளாய் வாழ்ந்த யூத இனத்தின் மீது, ஐரோப் பாவில் எல்லா வகுப்பாருக்குமே வெறுப்பு. யூதர்கள் பட்டுவந்த இன்னல்களுக்கும்—பழி மொழிகளுக்கும்— அவமானங்களுக்கும்—ஓர் அளவு கிடையா. "யூதன்

என்றால் அவனுக்கு இரக்கம் காட்டாதே" என்பது தீர்க்கமான எண்ணம். சமூகத் துரோகிக ளாகவே யூதர்கள் கருதப் பட்டார்கள் எங்கும் எவராலும்.

இந் நிலைமையின்—"ஹில்சனர்" எனும் யூத இளைஞன் மந்திர ஆராதனை சடங்கில் 'செக்' பெண்ணொருத்தியை உயிர் பலி யிட்டான்—என்றதொரு வழக்கு விசாரணைக்கு வந்தது. இவ் வழக்கு சரிவர நிருபண மாக வில்லை எனக்கூறி தள்ளுபடி செய்தார் நீதிபதி. ஆனால் போலீசார் விட்டுவிடவில்லை.

மற்றொரு கொலைக் குற்றத்தை "ஹில்சனர்" மீது சாட்டினர். "இன்னொரு அழகிய பெண்ணை தன் காம இச்சைக்கு கருவியாக்கி கசக்கி எறிந்தான். கடைசியாக அப்பெண்ணையும் மதச் சடங்கு என்ற பெயரால் கொன்றான்" என்று போலீசு தரப்பில் வாதிட்டனர்.

இக்கொலைக் குற்றத்தி லிருந்து அவன் தப்ப முடியவில்லை. கொடுந் தண்டனையே கிடைத்தது இப்போது.

இவ்வழக்கு விசாரணையின் ஒவ்வொரு அம்சத்தையும் துருவி ஆராய்ந்து வந்த "மசாரிக்" "நீதி செத்து விட்டது — நேர்மையி லிருந்து நழுவி விட்டார்கள்—அந்த யூத இளைஞனுக்கு கொடுந் தண்டனை கொடுத்தது பெரும் குற்றம்" என்று கூறினர். "ஹில்சனரின்" சார்பாக வழக்கறிஞராக வருகை தந்தார்—வாதாடினர். பத்திரிகைகள்—பிரசுரங்கள்—மூலம் நீதியைத் தெளிவு படுத்தினர். யூதர்களிடையே மதச் சடங்கில் நரபலி கிடையா தென்பதை பற்பல நூற்களின் துணை கொண்டு நிரூபித்தார். வழக்கில் பல தவறுகள் — சோடிப்புகள்—நடந்திருப்பதை வெளிநாட்டு சட்ட நிபுணர்களின் நியாய வாதங்களையும் வைத்தியர்களின் நுட்ப ஆதாரங்களையும் — பிரேத பரிசோதனையில் நிகழ்ந்த பிழைகளையும் முன்னிறுத்தி வழக்காடினர்.

மறு விசாரணையின் போது "ஹில்சனரின்" தண்டனை குறைக்கப்பட்டது. "மசாரிக்" தான்மேற் கொண்ட நன்முயற்சிகளில் வெற்றி கண்டார்.

அநீதிக்கு அடிபணியக் கூடாது—உண்மைக்காக உழைக்க ஒருபோதும் ஓடி ஒளியக்கூடாது—என்பதே அவரது குறிக்கோள்.

அவர் இவ்விதம் எதற்கெடுத்தாலும் தீவிரமாக போராடியதால் அதிகாரிகளின் பகை—ஜெர்மானிய ரின் சினம்—சீறிப் பாய்ந்தன.

பாதிரிமார்கள்—ஆட்சியாளர்கள்—அவர் மீது அநி யாய குற்றங்களைச் சுமத்தினர் — வழக்குத் தொடர்ந் தனர்.

அறிவின் திறத்தால்—ஆற்றலின் விளைவால்— நாணயமான நடத்தையால் — அக் குற்றப்பட்டியலி லிருந்து தன்னை கீர்த்தியுடன் மீட்டுக் கொண்டார்.

இதனல் பாராளு மன்றத்திலே பெரும் புகழுக்கும் —பெயருக்கும் உரியவரானர்.

அநீதிக்கு ஆளான அப்பாவிகள் — ஆதரவற்ற அனாதைகள்—பசியோடு பரதவிக்கும் பராரிகள்—ஆகி யோருக்குப் பரிந்து பேசுவார்—போரிடுவார். "செக்" மக்களின் விவகாரங்களில் அதிகாரத்துடன் விவாதிக் கக் கூடிய விவேகி "மசாரிக்கே".

எந்தவிதமான கட்டுப்பாடு களுக்கோ—மத சம்பிர தாயங்களுக்கோ—மனிதன் அடங்கி நடக்காமல் மனச் சாட்சிப்படி வழி நடப்பதே மனித தருமம் என்பதை நிலை நிறுத்தினர்.

நானிலமே எதிர்த்து வருவதாயினும் நியாயம் – நீதி, நேர்மை இவற்றின்று நழுவக் கூடாது என்ற நிச்சய மான நினைப்புடையவர்.

இரண்டாவது இப்படி :

ஆஸ்திரியப் பேரரசின் வெளிநாட்டு மந்திரியான "ஆரெந்தால்" பிரபுவுடன் போராடி அவர் வெற்றி பெற்ற சம்பவம் புகழேணியின் உச்சிக்கு கொண்டு சென்றது அவரை.

ஆஸ்திரியாவின் மேற்பார்வையின் கீழ் "பாஸ்னியா" "ஹெர்ஸகோவினு" என்ற இரு மாகாணங்கள் இருந்தன. இவற்றை ஆஸ்திரியாவின் பகுதிகளாகவே ஆக்கி பேரரசின் எல்லையைப் பெரிதாக்க திட்டமிட்டனர்.

அதற்குரிய சந்தர்ப்பம் வாய்த்த பொழுது வெளிநாட்டு மந்திரியும்—ராணுவ மந்திரியும் கூடிப் பேசினர். ஆஸ்திரியப் பெ ம் படையை அம் மாகாணங்களின் மீது ஏவினர். அவைகளையும் அடி பணிய வைத்தனர். ஆணவ வெறியாட்டத்தின் முத்திரைகளைப் பதித்தனர்.

இக் கொடுங்கோன்மையை உலகோர் கண்களி லிருந்து மறைக்க பொய்க் கதைகளைப் புனைந்தனர். அம் மாகாணங்களில் புரட்சி நோக்கத்துடன் ரகசியக் கூட்டங்கள் வேலை செய்து வந்ததாகவும் இதன் மூல மாக ஆஸ்திரியாவிற்கு ஆபத்து வர விருந்ததாகவும் ஆகவே தற்காப்பு நடவடிக்கையில் இறங்கியதாகவும் அறிவித்தனர்.

"டாக்டர் பிரீட்ஜெஸ்" என்பவரிடம் சில தஸ்தாவேஜி களைக் கொடுத்து இப் பொய்யை மெய்ப்பித்து கட்டுரை ஒன்று எழுதுமாறு செய்தார் "ஆரெந்தால் பிரபு".

அக்கட்டுரையால் அவமானத்திற்கு ஆளான பலர் "பிரீட்ஜஸ்" மீது மானநட்ட வழக்குப் போட்டனர். ஆனல் அதிகாரிகளோ அவ்வழக்கை விசாரிக்க படு மோசமான ஆசாமிகளை — தலையாட்டிப் பொம்மைகளை நீதிபதிகளாக நியமித்தனர்.

வழக்கின் விசாரணை விபரீதமாகவே நடந்தேறி யது. வாதிகளின் சாட்சியங்களை அனுமதிப்பதில் அநி

யாயத்தைக் கடைப் பிடித்தனர். மீறி வந்தவர்களையும் விரட்டி மிரட்டி அச்சுறுத்தினர்.

இந்த வழக்கு விசாரணை வெளிநாட்டுப் பத்திரிகைகளில் பத்திபத்தியாக வெளி வந்தது. எங்கும் ஒரே பரபரப்பு.

"மசாரிக்" வழக்கைக் கூர்ந்து கவனித்து வந்தார். ஆஸ்திரியாவின் போக்கால் அனர்த்தமே விளையுமென அறிந்தார். ஆட்சியின் அலங்கோலத்தைக் கண்டார். நடந்த மோசடிகளை உணர்ந்தார். அம் மாகாணங்களுக்கு நேரில் சென்று அம்மாதிரியான ரகசிய சங்கங்கள் இருந்தனவா? புரட்சி, சதி உருவானதா? என்றெல்லாம் புலன் விசாரித்துத் திரும்பினர்.

"டாக்டர் பிரீட்ஜஸ்" கட்டுரை எழுதியதில் எவ்வித தவறுமில்லை. அவரிடம் உத்தியோக பூர்வமாக கொடுக்கப்பட்ட பத்திரங்கள் கள்ளக் கையெழுத்திட்டுத் தயாரானவை" இவ்வாறு பார்லிமெண்டில் பேசினர். பத்திரிகைகளில் எழுதினர்.

வெளிநாட்டு மந்திரியின் விழிகள் பிதுங்கின. வெலவெலத்துப் போனர். வந்த வெறிக்கோ அளவில்லை. "மசாரிக்" அத்தோடு விட்டாரா? "ஆரெந்தால் பிரபு" வின் அக்ரமத்தை அடுக்கடுக்காய் உடைத்தெறிந்தார். அப்போது வெளிநாட்டுக் கொள்கைப் பரிசீலனைக் குழுவின் அங்கத்தினர் என்ற கோதாவில் அக் குழுவின் அந்தரங்கக் கூட்டத்திலும் ஆணித்தரமாகக் கண்டித்தார் அமைச்சர்! ஆஸ்திரிய ஆளவந்தாரின் ஆணவப் போக்கினை அகிலம் அதிர அறிவுறுத்தினர்.

"ஆரெந்தால் பிரபு" தான் செய்த சூழ்ச்சியை ஒப்புக்கொண்டு தீரவேண்டிய கட்டம் வந்துவிட்டது. ஒரு நாட்டை ஆக்ரமிப்பதற்கு பொய்ப் பத்திரங்களை சிருஷ்டிக்கும் கீழ்த்தரமான வேலைக்குக் கூட "ஆஸ்திரியா"

துணிந்துவிட்டது என்பதை சர்வதேசங்களும் உணர்ந்தன.

"மசாரிக்" புகழ் ஓங்கியது.

அவரை அமெரிக்கா அமோகமாய் வரவேற்றுப் பல்கலைக் கழகங்களில் ஆய்வுரை ஆற்ற அழைத்தது. "சிக்காகோ" சர்வ கலாசாலை கௌரவ டாக்டர் பட்டமும் வழங்கிற்று அவருக்கு.

# 14. இருள் கவிந்த வானம்!

எதிர்பாராத நிகழ்ச்சிகள்—அடிக்குமேல் அடியாக விழும் அதிர்ச்சிகள்—அரசியல் அதிர்வேட்டுகள் - தொடர்ந்து கிளம்பின. உலகமெங்கும் இருள் கவிந்த வானம்!

ஆஸ்திரிய இளவரசர் "பெர்ணன்ட்" கொல்லப் பட்டார். "செர்பியா" மீது ஆஸ்திரியா புலியெனப் பாய்ந்து போர் தொடுத்தது. முதலாவது உலகப் போரும் மூளத் தொடங்கிற்று.

இவை "மசாரிக்" எதிர்பாராத மாற்றங்கள்—அவரது நிலைமை மிகவும் சிக்கலாகிவிட்டது—சிந்தனை....! சிந்தனை....!! எந்நேரமும் சிந்தனை!!!

பேராசைபிடித்த வல்லரசுகளின் போரில் "செக்" சேர்ந்து போரிடுவதா? விலகி நிற்பதா? நடைமுறையில் எது நலம்? "செக்" எவ்வாறு பாதிக்கப்படும்? ஆஸ்திரியப் பேராட்சியின் வருங்காலக் கொள்கை எப்படி வரையறுக்கப்படும்? 'செக்' நாட்டின் விடுதலையை ஆஸ்திரியா ஒப்புக்கொள்ளுமா? பிற நாடுகளின் போக்கு எப்படி இருக்கும்? என்ற எத்தனையோ எண்ணச் சுழல்கள்—சிந்தனைச் சிக்கல்கள்—விடை அறிய

முடியா வினுக்கள்—எழுந்தன அவரது. சிந்தனை திடலிலே.

ஆஸ்திரியா உருக்குலையா திருந்தால் தான் ஜெர்மானிய ஆதிக்கம் தங்களை விழுங்காதிருக்கும் என்ற நம்பிக்கையும்—தங்கள் "ஸ்லாவ்" இனத்தைச் சார்ந்த வல்லரசான ரஷ்யா என்ருவது ஒருநாள் தங்களை விடுவிக்கும் என்ற ஆசையும்—'செக்' மக்களின் மனதிலே ஊறிப்போயிருந்தன.

இதற்கு ஆசைதான் காரணமேயன்றி அறிவல்ல. 'மசாரிக்' இக் குருட்டு நம்பிக்கையை ஏற்பவரா? அறிவின் குன்று—அறியாமையின் கன்று ஆவாரா என்ன? அவர் ரஷ்யாவைப்பற்றி நன்ருகப் படித்திருந்தார். வெளிநாடுகளிலுள்ள ரஷ்யப் பேரறிஞர்களைக் கண்டு கலந்து பேசியிருக்கிருர். ரஷ்ய எழுத்தாளர்கள்—வரலாற்றுப் பேராசிரியர்கள் — முதலியோரைப் பேட்டிகண்டு ரஷ்யாவின் போக்கு இன்னதாகத் தான் இருக்குமென தெளிவு படுத்திக்கொண்டார்.

ரஷ்யாவில் நிலவிய "சார்" ஆட்சி பார்வைக்குப் பலம் பொருந்தியதாகவே தோன்றியதே தவிர உள்ளே பூராவும் உடைசல்களே! கீழ் திசைக் கிருஸ்துவ மத பிரசாரத்தைக் காப்பாற்றுவதில் தான் 'சார்' மன்னரின் கருத்து இருந்தது.

"மசாரிக்" எல்லாவற்றையும் ஆர அமரயோசித்தார். குழம்பிக் கிடந்த மனதை ஒருநிலைப்படுத்தினர். தனி அறையில் அமர்ந்தவாறு ஆழ்ந்து நோக்கினர் அரசியல் சூதாட்டத்தை. "செக் மக்களின் சுதந்திர வாழ்வே அவரது சுவர்க்கம்!" இக்கனவு நினைவாக வேண்டுமே? இப்போர்—ஓர் சரியான சந்தர்ப்பமே!

சிலநாழிகை பேனுவும் கையுமாய் வீற்றிப்பார்—இன்னும் சிறிது நேரம் பூகோளப்படத்தை பார்த்தவாறு அமர்ந்திருப்பார்—பெரும்பாலான நேரங்களில்

அறையிலே இங்கும் அங்குமாக உலவுவார்—ஏதேனும் புதியதொரு திட்டம் எண்ணக்குவியலிலிருந்து உதிர்ந்தால், போதும் உடனே ஒரு காகிதத்திலே 'மள மள' வென்று எழுதிக்கொள்ளுவார்—வருவோர்—போவோருக்கு ஏற்றவாறு பதில் அளித்துக்கொண்டே யிருப்பார்—ஜன்னல் வழியாக 'செக்' நாட்டின் வளப்பத்தை அடிக்கொருதரம் பார்த்துப் பெருமூச்செறிவார்—மறு நிமிடம் ஒரு புரட்சிக் கனல் உருவாகி விடும் அவரது உள்ளத்திலே.

# 15. புரட்சிக் கனல்

"மசாரிக்" இயல்பாய்ப் புரட்சிக்காரர் அல்ல. எளிய இதயம் படைத்தவர்—இரக்கசித்தம் உடையவர்—ஆனல் நாட்டின் சீர்கேடான நிலைமை புரட்சிக்காரராக ஆக்கிவிட்டது அவரை.

ஐந்து குழந்தைகட்கு தந்தையார்—பெருங் குடும்பத்தின் பொறுப்புள்ளவர்—பாராளுமன்ற அங்கத்தினர்—பல்கலைக்கழகப் பேராசிரியர்—பலருக்குப் பதில் பகர்ந்து தீரவேண்டிய பொதுநலப் பணியாளர்—"மசாரிக்!" இத்தனைக்கும் பாத்தியப்பட்ட அவர் 64-வது வயதில் அவனியை ஆச்சரியத்தில் ஆழ்த்தினர்.

புரட்சிக்காரர் ஆனர்.

யுத்த நிலவரத்தையும்—ஆஸ்திரியாவின் சுயநலப் போக்கையும் ஊன்றிக் கவனித்த பின்னர் "செக்" மக்களின் விடுதலையை பயங்கரப் புரட்சிக்கு அப்புறமே பார்க்க இயலுமெனப் புலப்பட்டது அவருக்கு.

படையில் இணைந்து போரிட்ட எண்ணற்ற வீரர்கள் ஆஸ்திரியாவுக்கு எதிராக ரஷ்யர்களிடம் சரண்

புகுந்தனர் மனமுவந்து. ஆத்திரமடைந்த ஆஸ்திரிய அதிகாரிகள் 'செக்' வீரர்களைச் சூறையாடினர். பழி வாங்கினர். சிரச்சேதம் செய்துவிட்டு சிரித்தனர் செறுக்குடன்!

தனது இன வீரர்களுக்கு ஏற்படும் அல்லலைக் கண்டார் அவர். இதுவே புரட்சிக் கனலைப் பரப்ப வேண்டிய காலம்—போர்க் கொடி ஏற்றவேண்டிய நேரம் - என்பதை உணர்ந்தார்.

கடைசி எச்சரிக்கையும் விடுத்தார் வருங்காலத்திலாவது 'செக்' நாட்டிற்கு சுயாட்சி தருவீர்களா என்று! அரசியல் வட்டாரத்திலே மௌனமே நிலவிற்று.

"இவனால் என்ன செய்ய இயலும்?" என்றே அலட்சியமாக எண்ணினர் போலும். முன்னாள் மந்திரி ஒருவரை பேட்டி கண்டார். பேச்சு வார்த்தை நடாத்தினார். ஆஸ்திரியா போரில் வெற்றி பெற்றால் 'செக்' மக்களுக்கு சுதந்திரம் வழங்குமா என்று கேட்டார். ஆஸ்திரிய அரசாங்கக் கொள்கையில் அம்மாதிரியாக சுதந்திரம் அளிக்கும் உத்தேசமே இல்லை என்பதை முடிவாகத் தெரிந்து கொண்டார்.

வெற்றி கிட்டினால் அந்த மயக்கத்திலே - மண்டைக் கர்வத்திலே – ஜெர்மானிய - ஆஸ்திரிய ஆதிக்கம் விபரீதமாகவே விளையாடும் என்ற வேதனைக் கதையை இப்போதே எழுதத் தொடங்கிவிட்டனர். ஏற்கனவே போலீசு புலிகள் புரட்சி மூளாவண்ணம் தடுக்க முற்பட்டிருந்தனர். ஒடுக்க நினைத்தனர் தலைவர்களை. சீர் திருத்தவாதிகளை சிறைப்பிடிக்க ஆரம்பித்தனர். பாதுகாப்பில் வைக்கப்படவேண்டிய பயங்கரவாதிகளின் பட்டியலில் "மசாரிக்கின்" பெயரும் இடம் பெற்றது. நாட்டினுள் மறைந்திருந்து புரட்சியை வளர்ப்பதா? வெளிநாடுகளுக்கு வெளியேறி எதிர்ப் பியக்கத்தை வலுப்படுத்துவதா? இது பெரிய பிரச்னையாக இருந்தது அவருக்கு.

சிலநாள் சுற்றுப்புற நாடுகளுக்கு போய்வருவதே சாலச் சிறந்த வழி. நடுநிலைமை நாடான "ஹாலந்து"க் குப் போனார். போரின் உண்மையான போக்கினைப் புரிந்து கொண்டார். அப்பால் ஆங்கிலேய நண்பர்கள் இருவரோடு கலந்துரையாடி எதிர்கால எதிர்ப்பிற்கு பிரிட்டனின் உதவி கிடைப்பதற்கும் - உறவை உறு திப்படுத்துவதற்கும் - ஆவன செய்து மீண்டார் அவர்.

"செக்" நாட்டுத் தலைநகரான "பிரேக்" நகரிலுள்ள போலீசு மேலதிகாரியின் வீட்டிற்கே சென்று புலன் விசாரித்து வந்தார் எனில், அவரது புத்தி சாதுர்யத்தை பகர்வது அவசியமோ?

அப்போது அமெரிக்கா நடு நிலைமை நாடாகை யால் அந்த நாட்டார் எங்கும் போகலாம் - வரலாம். பகை நாடுகளில்கூட நடமாட முடியும். ஆகவே நெருங் கிப் பழகிய அமெரிக்க நண்பர் ஒருவரை பல்வேறு இடங்களுக்கு அனுப்பி தனது திட்டத்திற்கு ஆதரவு தேடினார். பிரிட்டனுக்கு தன் நிலைமையை மேலும் மேலும் விளக்கிக் கொண்டேயிருந்தார்.

"மசாரிக்கின்" ஆக்க வேலைக்கு ஆதரவாக ஆங் காங்கே புரட்சிக் கனல் புகைந்தது. ஆஸ்திரியாவை அடக்கும் நோக்கம் இதர "செக்" தலைவர்களான "டாக்டர் கிராமர்"—"ஸ்டிபானிக்" — "பினேஷ்"—(இவர் 'செக்' நாட்டின் ஜனாதிபதியாக இருந்து அண்மையில் ஆவிதுறந்தவர்)—ஆகியோரிடமும் தலை தூக்கிற்று.

புரட்சி என்றாலே ரகசியச் செயல் அல்லவா? ஒருவரோடொருவர் கலந்து வெளிப்படையாக வேலை செய்ய முடியாதே!

துணைத் தலைவர்கள் — தொண்டு புரிவோர்கள் — இவர்களின் தொடர்பின்றி தனியே இயங்கினார் "மசாரிக்" இணைப்புச் சங்கிலியை பிணைப்பதற்கு போதிய வசதியின்றிப் புலம்பினார். ஒரு தனி மனித

ரால் எவ்வளவுதான் சாதிக்க இயலும்? துணையும்—தொகையும் வேண்டாமா?

இதற்கும் ஒரு ஏற்ற நாள் வராமல் போகவில்லை. —'செக்' இளைஞர்கள் போர் அரங்கத்திலே கொலை செய்யப்படுவதையும்—தண்டிக்கப்படுவதையும்—புரட்சியாளர்கள் கைது ஆக்கப்படுவதையும்— தனக்கு ஒரு காலத்திலே ஆசிரியராக இருந்த பேராசிரியர் "மசாரிக்கிடம்" எடுத்துக்கூற வந்தார் "பினேஷ்."

"நாம் வாளா இருத்தல் கூடாது—வம்பர்களின் வாலாட்டத்தை ஒட்ட நறுக்க வேண்டும்—ஏதேனும் நடவடிக்கையில் இறங்கியே தீரவேண்டும்" என்று இவ்விருவரும் முடிவுகட்டினர். தனக்கொரு உற்ற தோழர் கிடைத்தாரே என மகிழ்ந்தார் 'மசாரிக்'. தனது முடிவான திட்டங்களை "பினேஷிக்கு" தெளிவு படுத்தினர்.

பிறகு 'பினேஷ்'—"மசாரிக்" இருவருமாக தனித் தனியே பிற தலைவர்களைப் பேட்டி கண்டனர். கூட்டு சக்தியைத் திரட்டினர். இவர்களைப் பித்துப் பிடித்தவர்களென் எள்ளி நகையாடிய மேதாவிகள் சிலர்—மனமார இணங்கினவர் பலர்.

"மாவியா" என்ற ரகசியச் சங்கம் முளைத்தது. பேரவை கூடிற்று. தினவெடுத்த தோள்களுடைய தோழர்கள் திரண்டனர். சீர்திருத்த வாதிகள் சேர்ந்தனர். நம்பிக்கையும் — திடமான நெஞ்சுறுதியும் — உடையவர்கள் மட்டுமே உறுப்பினர்களாக சேர்க்கப் பட்டனர். உதைக்கு அஞ்சுவார்களாயின் அங்கு இடங்கிடையாது. தியாகத்தராசில் எடைபோட்டுத் தீர்மானிக்கப் பட்டனர்.

எதையும் ஏற்கும் இதயத்தவரின் எண்ணிக்கை ஏராளமாக இருந்தது. தலைவனின் கட்டளைக்குக் கீழ்ப் படிந்து நடக்கும் கர்மவீரர்கள் கணக்கற்றுக் கூடினர்

—புரட்சிக் கீதம் பாடினர்— "மாவியா"வை நோக்கி நாடினர்.

திட்டங்கள் பல தீட்டப்பட்டன கூர்வாட்களைப் போல. அவைகளில் முக்கியமானவை:

(1) தலைவர் "மசாரிக்" வெளிநாட்டிற்குத் தப்பிச் சென்று தலைமறைவாக வாழ்வது.

(2) சிறிது காலம் சென்றபின் "பினேஷ்" தப்பிச் செல்வது.

(3) மற்றவர்கள் நாட்டினுள் இருந்தவாறே கிளர்ச்சி செய்தல்.

(4) செய்திகளை ராணுவத் தணிக்கை இலாகாவுக்குத் தெரியாமல் அனுப்புவதற்குரிய ரகசிய முறைகளைக் கையாள்வது.

(5) வேற்று நாடுகளில் வாழும் "செக்" மக்களிடம் பொருளுதவி கோருவது.

(6) ஆஸ்திரியப் படைகளை விட்டுப் பிரிந்து ரஷ்யாவினிடமும் பிற தேச நாடுகளிடமும் அடைக்கலம் போந்த படைவீரர்களை ஒன்று திரட்டி "செக்" விடுதலைப் படை அமைப்பது.

(7) ஆஸ்திரிய இனபாவங்கள், நடைமுறைகள் இவற்றிலிருந்து "செக்" இனத்தவரை தனியே பிரித்து விட பணிபுரிவது.

(8) ஆட்சியை கைப்பற்றிய சொந்த அதிகாரம் பெறுவதற்காகத் தங்கள் தீவிர இயக்கத்தை நாடெங்கும் பிரச்சாரத்தின் வாயிலாக விளம்பரப் படுத்துவது.

(9) உரிமை வேட்கையுள்ள மக்களாக "செக்" இனத்தவரை விழிப்பூட்டி தயார் பண்ணுவது.

ஆகிய இன்னோரன்ன தீர்மானங்கள் "மாவியா" இன உரிமைக் கழகத்தில் அமுலுக்கு வந்தன.

# 16. மாறுவேடம்

அஸ்திரிய—இத்தாலிய எல்லே! அமர்க்களமும் அமைதி யின்மையும் அடார்ந்து கிடந்த நேரம்!

எங்கு நோக்கினும் ராணுவ உளவாளிகளின் நடமாட்டம் தான். நன்மை—தீமை எதையும் பிரித்துக் காணமுடியாதவாறு ஒரே குழப்பம்—எவன் ஒற்றன்?-எவன் போலீசு? என்று கண்டவுடன் கணிக்க முடியாத நிலைமை.

கூட்டத்தோடு கூட்டமாக—ஆள்களுடன்—ஆள்களாக—கூடி இருந்தனர் குல்லாய் உடுப்புத் தரிக்காத ரகசிய போலீசார். யார் நடமாட்டத்தின் மீதாவது சிறிது சந்தேகம் ஏற்பட்டாலும் உடனே கெடுபிடியான உத்தரவுகள் காதுக்கும் வாய்க்குமாக 'மள மள' வென்று கைமாறும். சந்தேகத்திற்கு ஆளான மனிதன் பாடு பிறகு அவதிதான்-அலங்கோலம் தான். தனது நிரபராதித் தன்மையை—தனது பிரசா உரிமையை நிலைநாட்டும் பத்திரத்தை- நம்பிக்கை ஏற்படும்படி காட்டி விடவேண்டும்-அதிகாரிகளும் இதை நம்ப வேண்டும்-ஏதோ ஏற்பட்ட தொல்லைகளுடன் ஆசாமி தப்பிவிடலாம். இல்லையென்ருல்..............?

அன்று என்னமோ புகை வண்டி நிலையத்தில் மக்கள் கூட்டம் அளவுக்கு மிஞ்சியிருந்தது.

தளர்ந்த உடல்-வளர்ந்த தாடி-ஒரு கழி-மற்ருெரு கையில் கைப்பெட்டி-இவற்ருேடு புகைவண்டியில் ஏறப் போன அந்தப் பேர்வழி தடுத்து நிறுத்தப்பட்டார். ராணுவக் காவலாளிகள் சோதனையிட்டனர்.

“தன்னை யார்-இன்னர்-என்று தெளிவுபட நிருபணம் செய்ய முடியாத இந்த ஆசாமியை என்ன

செய்வது? '' என்று விசாரித்தறிய தலைமை ராணுவ நிலையத்திற்கு தந்தி கொடுத்தனர்.

“பதில் என்ன வருமோ? அதற்குள்ளாக இந்த இரும்புப் பிடியினின்று தப்பியாக வேண்டுமே!'' சிந்தனை சிற்றருவிபோல சிலு சிலுத்தது.

தான் பாராளு மன்ற உறுப்பினர் என்றும் எங்கும் போக-வர உரிமை உண்டென்றும் தடுத்து நிறுத்தும் அதிகாரம் எவருக்கும் கிடையாது என்றும் அழுத்தமாய்ப் பேசினுர் அகப்பட்டுக் கொண்டவர். பின்னரும் திகைத்தனர் ராணுவ வீரர்கள்.

வண்டி புறப்பட ஐந்தே நிமிடங்கள்! வேறுவழி ........? விபரீதம் தான் நிகழுமோ? மறுவினடி........? அறிவிப்பிற்கென்று அலறிவிட்டு வண்டி கிளம்பியது. அருகே நின்ற இரு ராணுவ வீரர்களை பலங்கொண்ட மட்டும் பிடித்துத் தள்ளினுர். இது நடந்ததும் வண்டியின் கடைசி வாகன் இவர்களைக் கடந்ததும் சரியாக இருந்தது. மேலும் .அவர்களுடன் மல்லுக் கட்டுவது தான் வழியா? இல்லை...........என்னே தைரியம்........! ஒரே தாவித் தொத்தி வண்டிக்குள் பாய்ந்துவிட்டார்.

எதிரிகள் ஓடிப் பார்த்தனர்-உரக்க உரக்க கூவிப் பார்த்தனர்-பயனில்லை. வண்டி போனது போனது தான்!

இத்துடன் விட்டுவிடவில்லை. அடுத்துள்ள ஸ்டேஷனுக்கு தந்தி கொடுத்தனர். “துரோகி—அரசாங்க உளவாளி — சோதனையிடு — பிடி — அடையாளங்கள் இப்படி இப்படி...........'' என்று.

இந்த விபரம் “மசாரிக்''கிற்கு தெரியாதுதான். என்றாலும் எதிரிகள் ஏதாவது நடவடிக்கையில் இறங்குவார்கள் என்றே எதிர் பார்த்தார். அடுத்த பத்து நிமிடங்கள் தனக்கு சோதனை காலம் என்பதை நன்கு உணர்ந்தார். அடுத்த ஸ்டேஷனில் வண்டி நிற்கும்

போது ஏதாவது நடந்து தீரும் என்று முடிவு கட்டினார், எதற்கும் முன் ஆயத்தம் தேவை யல்லவா........!

அடுத்த ஸ்டேஷனில் சோதனை போட்டு அடையாளம் கண்டுபிடிக்கக் கூடிய அளவுக்கு நடந்து கொள்ள "மசாரிக்" என்ன மண்டுகமா?

மாற்றுடை—புதிய 'மேக்கப்'—இப்போது "மசாரிக்" ஓர் ஜெர்மானிய நடிகனைப் போல.

"அடையாளம் தெரிவிக்கப்பட்டபடி அப்படியொரு ஆசாமியை இந்த வண்டியிலேயே காணோமே ...........?" என்றே அடுத்த ஸ்டேஷனில் சோதனையிட்ட அசகாய சூரர்கள் அலுத்து சலித்துக் கொண்டார்கள்.

1914-ம் ஆண்டு 17-ம்நாளன்று "மசாரிக்" ஆஸ்திரிய எல்லையை விட்டு அகன்றார். ராணுவத்தாரை கீழே தள்ளி ஓடும் ரயிலில் தாவி கடந்தாரே அன்று அவருக்கு கடும் சுரம்! ஆயினும் கடமை-திடம் அவரை ஊக்குவித்தன.

மனைவிக்கு விபரம் கூறி தன்னுடன் அழைத்துச் செல்ல அவருக்கு ஆவல்தான். ஆனால் இம்முறையில் ஏற்படும் தொல்லைகள் தீர்க்கமான ஆலோசனைக்கு பின் ஏற்பட்ட தீர்க்கமான முடிவு இதுதான். "மனைவி "காரிக்" அங்கேயே இருந்து மக்களிடையே விழிப் புணர்ச்சி ஏற்படச்செய்வதே நல்லது. தான் ஆபத்தை அணைத்து வழி காண பல இடங்களுக்கும் சென்று ஆதரவு திரட்டுவது."

ஆக காதலி "காரிக்கை" கொடும்புலிகள்—கொடுமையாளர்கள்-நடமாடும் நாட்டின் நடுவே விட்டுச்செல்ல நேர்ந்தது. "எங்கே போகிறார்? எப்போது வருவார்" எதுவுமே தெரியாது மனைவியாருக்கு! தனது வாழ்வின் மன்னர் மேற்கொண்டுள்ள புனிதப் பணியின் பெருமை அவளுக்கு தெரியும் அல்லவா? அவள் தான் மனப்

பூரிப்போடு இதற்கு சம்மதம் கொடுத்து விட்டாளே! அவ்வளவு போதுமல்லவா? இத்துடன் இடையே அவள் மேற்கொள்ள வேண்டிய சேவையைப்பற்றி அவள் நன்கு உணர்ந்து தானே இருக்கிருள்.

இந்நிலைமையில் மேற்கொண்டு விவரங்கள் தனது வாழ்வின் வளர் மதிக்கு தெரிய வேண்டியதில்லை என்பதே அந்த அரசியல் தீர்க்கதரிசியின் அறிவின் முடிவு.

தான் செய்கிற, போகிற வேலையைப் பற்றிய கொள்கையை அவள் அறிந்திருந்தபொழுது, தான் எங்கு போகிருர், எங்கெங்கே தங்கப் போகிருர் என்பதைப்பற்றிய விவரங்கள் அவளுக்கு அவசியமில்லையல்லவா? அப்படிக் கூறிச் சென்ருல் உண்மையே பேசுவது என்னும் திடசங்கல்பமுள்ள தன் மனைவியை நாளை போலீஸார் வந்து விசாரித்து இம்சை செய்தால் அது தனது திட்டத்திற்கு பங்கம்தானே. ஆகவே தனது மனைவியிடம் விவரங்கள் கூருமலேயே கிளம்பி விட்டார்.

அப்போது அவரது மூத்த மகன் ஆஸ்திரியப் படையில் போர் வீரனுக இருந்தான். மகளோ படை வீரருக்கு மருத்துவம் பார்க்கும் வைத்தியப் பிரிவில் வேலை செய்தாள். இப்பேர்ப்பட்ட ஏன் என்று கேட்க ஆளில்லாத சூழ்நிலைமையிலே - தனக்கும் இயக்கத்திலுள்ள இதர தலைவர்களுக்கும் தொடர்பில்லாத நேரத்திலே துணிகரமான - துடிதுடிக்கும் மக்களின் நிவாரணமான - இச்செயலில் இறங்கினுர்.

உரிமைத் தாகத்திலே தனது பிறப்புலகைப் பிரிந்தார் - ஓடினுர் 'செக்' நாட்டை தொலைவில் விட்டுவிட்டு.

---

# 17. போராட்டம்

பின்னல் சங்கிலியைப்போல எண்ண முடியாத அளவில் எப்படி எப்படியோ எதிர்பாராத நேரத்திலும் வந்த இன்னல்களை யெல்லாம் கடந்து வெளியேறி விட்டார். இனி அடுத்து........?

ஒவ்வொரு நாட்டின் யுத்தக் கொள்கையையும் எவ்வாறு உள்ளது என்று ஊடுருவி நோக்கினர். மனிதனுடைய தன்மான உரிமை அரசியல் சூழ்ச்சிகளில் சிக்கி விடுகிறபொழுது, சிக்கல் எடுப்பது அதன்வழியே திறமையை கையாள்வதின் மூலமாகவேதான் சித்திக்கும்!

ஆஸ்திரிய—ஜெர்மானிய நாடுகளுக்கு எதிரான பிரஞ்சு — பிரிட்டிஷ் —ரஷ்ய — அரசாங்கங்களின் கொள்கை அவரின் போர்க் கோலத்திற்கு ஆதரவாக இல்லையே என ஆவி சோர்ந்தார். “ஆஸ்திரிய—ஜெர்மானிய கூட்டு நட்புக்கு வேட்டு வைத்துவிட்டால் ஜெர்மனியை தொலைத்துக்கட்டிவிடலாம்.” இது பிரிட்டிஷாரின் பேராசை. இதற்கேற்றவாறே அவர்களின் போர்த்திட்டம் படைக்கப்பட்டிருந்தது. சிண்டு முடிந்துவிட்டு சொக்கட்டான் ஆடுவதில்தான் அவர்கள் சமர்த்தர்களாச்சே!

இந்த லட்சணத்தில் ‘செக்’ நாடு என்றால் வெளி நாடுகளில் எவருக்கும் விபரமே தெரியாது. ‘செக்’ தேசத்தான் என்று கூறின் ஆஸ்திரியப் பிரஜை என்றே அன்னிய நாட்டினர் அர்த்தம் கொள்வர்.

வடவர் பிடியினின்று விடுபட விரும்புகின்ற திராவிட நாட்டின் இன்றைய நிலைமைதான் அன்றைய 'செக்' நாட்டில் இருந்தது.

உதுமானிய, ரோம, எகிப்திய சாம்ராஜ்யங்கள் உதிப்பதற்கு முன்பே உலகை உணர்ந்த—உணர்த்திய இனம்—திராவிட இனம். மரஉரி தரித்து மலைப்பொந்து களில் வெள்ளையன் முடங்கிக் கிடந்த காலத்திலே, மாபெரும் கடலிலே மரக்கலம் ஓட்டிய மறவர் இனம்—திராவிட இனம். காடு கழனிகளில் கருங்கற் பாறை களில், மேலை நாட்டு நாகரிகத்தின் முன்னோர் படுத்து உறங்கிய சமயத்தில், வீடு கட்டி — வீதிகள் அமைத்து — பட்டி தொட்டி முதல் பழம்பெரும் "பூம்பட்டினம்" வரை பற்பல நகர்களை படைத்த இனம்- திராவிட இனம். "மொகஞ்சாதரா" - "ஹரப்பா" ஆகிய பழங்குடிச் சின்னங்களைப் புதுக்கிய புதுமை இனம்—திராவிட இனம். ஐந்து இனிய மொழிகள்—ஐந்தருமையான மொழிவழி நாடுகள் — ஐம்பெரும் காப்பியங்கள்—அத்தனையும் தன்னகத்தே அடக்கிய ஆற்றல் மிக்க இனம்—திராவிட இனம். ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே ஏற்றம் மிகும் அரசுமுறை—வாழ்க்கை வண்ணம்—வரையறைகள்—ஏன் அகிலப் பொருளுரைகள் அவ்வளவையும் ஆணித் தரமாக வகுத்த, "வள்ளுவப் பெருந்தகையை"ப் பெற் றெடுத்த பூர்வீக இனம் - திராவிட இனம்.

ஆனால் இன்று இப்படி ஒரு இனம் இருப்பதாக இதர நாடுகள் எண்ணுகின்றனவா? அங்கொன்றும் இங்கொன்றுமாக ஏதோ ஒன்றிரண்டு வரலாற்று வல்லுநர்கள் "திராவிட இனம் இருந்தது—திராவிட

நாகரிகம் இருந்தது - திராவிட கலை இருந்தது - இன்னும் இருக்கின்றன இவைகள் எல்லாம்'' என்று கூறிவிட்டால் மட்டும் போதுமா? வரலாற்று பெருமை இருக்கிறது என்று கூறிக்கொண்டால் மட்டும் இனப் பெருமையைக் காத்துவிட்ட மாதிரி ஆகிவிடுமா? இந்த இனத்திற்கென ஒரு தனிநாடு தேவை - அதுவே "திராவிடநாடு!'' இந்த எழுச்சி முரசு கேட்கிறதே என்று எவனாவது ஏன் என்று கேட்கிறானா? ஏறிட்டுப் பார்க்கிறானா? அல்ல!

காரணமா? பிறநாட்டார் கண்களிலே தென்படாதவாறு "திராவிடம்'' தேய்க்கப்பட்டுவிட்டது. வரலாற்றுச் சுவடியே திசைமாறி தீட்டப்பட்டுவிட்டது. இந்தியா—பாரதம்—இந்துஸ்தான்—என்றவாறு இப்படி எத்தனை எத்தனையோ திரைகள். பின்னர் எங்கே திராவிட இனத்தின் தீங்குரல் திக்கெட்டுமுள்ள நாடுகளின் இதயங்களைத் தொடப் போகிறது?

ஆயிரமாயிரம் "மசாரிக்''குகள் கிளம்பி—அகிலமெங்கும் அலைந்து அலைந்து—அலறி அலறி—ஆவி துறக்கும் அந்தக் காலம் வரும்போதுதானே

> "ஓ! திராவிட இனமா நீங்கள்! வரலாற்று வம்சமே! பிச்சைக்காரப் பயல்களிடம் பறிகொடுத்த உனது நாட்டைப் பிரித்துக் கேட்கிறாயா? கேள்! உரக்கக கேள்! உதவி தருகிறோம் நாங்களும்'' என்று ஆதரவுதர

முன்வருவார்கள்.

சீரழிந்த 'செக்கின்' சங்கடத்தை சிந்திய கண்ணீரோடு எடுத்துக்கூறிய "மசாரிக்''கைப் பார்த்துச் சிரித்தவர் தொகை என்ன சிறிதளவா? "செக்கின் சார்பாக

பேச அதிகார பூர்வமான யோக்கியதை உனக்கு இருக்கிறதாக நிரூபி. அப்புறம் யோசிக்கலாம் அபயம் அளிப்பதைப்பற்றி" இவ்வாறு கேட்டனர் இன்னும் சில அரசியல் சாணக்கியர்கள்.

பண பலமோ—அனைத்துலகப் பிரச்சாரமோ—கிடைக்கப்பெருத மிகச் சாதாரண தலைவர்—ஆனால் மக்களின் முடிசூடா மன்னன்! என்றாலும் இவர் ஆஸ்திரியப் பிரஜையாகப் பாவிக்கப்படுவதால் பிற நாடுகளிலே நடமாடும்போது அவரை பகைநாட்டான் என்ற சந்தேகக் கண்ணோடுதான் பார்த்தனர் பலரும்.

ஆயினும் கர்மமே குறிக்கோளாகக் கொண்டார்—கண் துஞ்சாது கடுமையாக உழைத்தார்-"நடுநிலைமை"யிலிருந்த இத்தாலிக்குச் சென்று பலரைப் பேட்டி கண்டார். ரஷ்ய—பிரஞ்சு—பிரிட்டிஷ்— அமெரிக்க—செரிபிய— தூதுவர்களைக் கலந்து பேசினர். பாராளுமன்ற உறுப்பினருக்கு உண்டான உரிமையை நன்கு உபயோகப்படுத்தினர். அப்பதவி தந்த பெருமை, போகிற இடங்களில் எல்லாம் அவரது பேச்சை பொறுமையோடும், கவனத்தோடும் பிறர் கேட்கும்படி வழி வகை தந்தது.

> தட்டியவுடன் கதவு திறக்கப்பட்டு எல்லோருக்கும் கிடைப்பது இயல்பு. தட்டாமலே கதவு திறக்கப்படும் தனிப்பெருமை அரசியல் தந்திரிகளுக்கு ஜனநாயக ஆட்சியில் தானாகவே கிடைத்து விடுகிறதல்லவா?

இந்த வசதியும் பெயரும் இல்லாமல் மட்டும் இருந்திருந்தால், இதற்குள்ளாக எதிரிகளிடம் பிடித்துக்

கொடுத்திருப்பர் பிறநாட்டவர். 'ஜினிவா'வை விட்டு 'சுவிட்சர்லாந்து'— இன்னும் பல! இவ்வாறு நீண்ட பிரயாணம்! நிமிடநேரங்கூட ஓய்வற்ற ஓட்டம்— உரிமையில் நாட்டம்—ஒரே உணர்ச்சி ஊட்டம்— ஓடினார்! ஓடினார்!! ஓடிக்கொண்டே இருந்தார்—உறு துணையை நாடி!!!

இப்படி ஒருவர், தங்கள் ஆட்சிக் கெதிராக அயல் நாடுகளின் ஆதரவு தேடி அலைகிறார் என்றால்—'அதற் கென்ன? அது அவரது உரிமை – ஐயோ போகட்டும்' என்று அயர்ந்து கிடப்பார்களா? இல்லை அமைதியில் தான் மிதப்பார்களா ஆட்சியாளர்?

திறமை மிக்க உளவுக் கலையின் நிபுணர்களை அவ ரைப் பின் பற்றி நோட்டம் பார்க்க அனுப்பி வைத்த னர். கருங்காலிகள் – கைக் கூலிகள்—கயவாளிகள்— இப்படிக் கானவர்களைப் பிடித்து, பேராசை ஊட்டி – பணத்தைக் கொட்டி—"மசாரிக்கை" கொன்றுவிட கருணையற்றவர்கள் கண்ய மிழந்தவர்கள்—கணத்துக் குக் கணம் வேலை செய்தனர்.

வேவுகாரர்கள் விஷமிட்டு வீழ்த்திவிட பல வேளை களில் முயன்றனர். இவற்றினின்று தப்பி உயிரைக் காப்பாற்றிக்கொள்ள அவர் பட்ட கஷ்டங்கள் கொஞ்ச நஞ்சமல்ல. விரல் விட்டு எண்ணக் கூடிய வேதனை நிகழ்ச்சிகளா? விட்டு விட்டு அவரைச் சுற்றி சூழ்ந்த சூழ்ச்சிகளா? இல்லவே இல்லை. எல்லாம் ஒன்றை ஒன்று பின் தொடர்ந்தன. எப்பொழுது - எந்த இடத் தில்—எது நடக்கும் என்று நிர்ணயம் செய்ய முடியாத நிலை.

இதனிடையே பேரிடி போன்ற செய்தி வந்தது—பித்துப் பிடித்தவராய் வாய்விட்டு புலம்பச் செய்தது. அவரது மூத்த மகன் அகதிகளை அப்புறப் படுத்தும் சேவையின் போது, சுரம் கண்டு செத்தான் என்பதே அது.

இதை ஒட்டித் தொடர்ந்தாற் போல—பேரிடியை அடுத்து பெரும் புயல். 'செக்' — 'மசாரிக்' இவ்விரண்டிற்கு மிடையே இருந்த தொடர்பு 'சொடக்கென்று' நெக்குவிட்டு உடைந்தது. காரணம் "பினேஷ்" 'செக்கில்' தங்கி யிருக்க முடியாத சங்கடமான நெருக்கடி! "பினேஷ்" பாரிஸ் நகரம் போய் விட்டார். அவருக்குப் பின்னர் 'செக்' புரட்சிப் பாதைக்கும் — அதை செம்மையுற சித்தி பெறச் செய்ய "மசாரிக்" மேற்கொண்டிருந்த பயண வழிக்கும் — உலவிய தொடர்பு அறுந்து விட்டது.

அப்புறம் அயர்வை அகற்ற அமைதியை நாடினர் சிறிது காலம். லண்டன் கல்லூரி ஒன்றில் பேராசிரியராக அமர்ந்தார்.

அங்கிருந்து கொண்டே பத்திரிகைகளின் மூலம் 'செக்' இனத்தின் சிறப்பையும்—சுதந்திரத் தேவையையும் வலி யுறுத்திக் கட்டுரைகள் வரைந்தார். சொல்லம்புகள் பாய்ச்சினர் ஆஸ்திரிய ஆணவ ஆட்சி மீது. உலக நாடுகளின் உள்ளன்பை 'செக்' மக்கள் மீது திருப்பினர். 'செக்' விடுதலைக்கு ஏற்றவாறு பிறரிடம் பரிவும்-நாட்டமும் சம்பாதித்தார். இப்போது சர்வ தேசங்களின் பார்வையிலே 'செக்' பிரச்சனை பட்ட வர்த்தனமாகப் பளிச்சிட்டுப் பிரகாசித்தது.

தன் இனத்தின் உரிமைக் குரலை உயர்த்தி உய ரியக் கட்டுரைகள் பற்பல எழுதிய பொழுது, "மனித இனம் உலகம் எங்கும் அமைதியும் ஆனந்தமும் கொள்ள வேண்டும். அன்றே உலக இன்பம் உருப் பெறும்" என்ற கொள்கையை மறந்து விட்டாரில்லை. காலம் காலமாக கருத்தறிவாளர்கள் மனித இனம் மாண்பு பெற என்னென்னமோ நற்கொள்கைகளை— தத்துவங்களை—நயம் மிகுந்த வழிகளை கூறித்தான் சென்றனர். "ஆமாம்! ஆமாம்! அருமையான கொள் கைகள் - மதங்கள் – மார்க்கங்கள்-பின்பற்றி பெருமை பெறுவோம்" என்று தலையை ஆட்டாதவர்கள் யார் இருந்தார்கள்? ஆனல் நடவடிக்கைகளிலோ எல்லாம் இனவெறி—சுரண்டல் - சூதாட்டம்.

மகத்தான மலைப் பிரசங்கம் நிகழ்த்திய ஏசுநாதர் பொன் மொழியை-புகழ் வழியை-பின்பற்றி எங்காவது "ஒரு மாதிரி கிராமம்"இருக்கிறதா என்று ஆராய்ந்தால்....? இவர்கள் தானே இப்படி சுரண்டல் கொள்கையைப் போற்றி - இன ஆதிக்கத்தை ஏற்றி கோடி கோடி மக் களைக் கொடுமைப் படுத்துகின்றனரோ என்று வருந்தி ஞர். இது போன்ற தத்துவக் கட்டுரைகளை தீட்டுகிற பொழுது இன உரிமை என்றால் என்ன? இன வெறி என்றால் என்ன? என்பதை நன்கு விளக்கினர். இன உரிமையைக் காப்பாற்ற விரும்புகிறவனே குறுகிய நோக்கம் உள்ளவன் என்று கூறுவது உண்மையை மறைக்கும் மாற்றுவழி என்பதை தெளிவாக்கினர்.

தன் குடும்பம் - தன் இனம் - தன் நாடு - தனிப் பெருமை கொண்டு வாழ விரும்புவதற்கும் தன் வீட்டுப் பெருமை - தன் இன மகிமை - தன் நாட்டின் திறமை

இவைகளை கொண்டு பிறரை சுரண்டி - கேவலப்படுத்தி —ஆதிக்கம் செய்வதற்கும் வேற்றுமைகள் உண்டு என்பதை பற்பல உதாரணங்களைக் காட்டி விரிவுரை எழுதினர்.

அவரது பொன்னன எழுத் தோட்டத்திலே புதுமை மணம் பெருகி நின்றது. ஆளானப்பட்ட எதிரிகள் கூட அவரது சொல்லாக்கத்தின் பொருள் வளத்தை - புகழ் நிறைவைப் போற்றினர்.

இதே சமயம் "பினேஷும்" - "ஸ்டிபானிக்கும்" - பிரஞ்சுப் பிரதமர் 'கிளமென்கோ' மந்திரி "பிரயாண்ட்" இவ்விருவரையும் நெருங்கி 'செக்' உரிமைக் குரலை எடுத்தோதினர். பிரஞ்சு அரசியலாரின் கவனம் 'செக்' மீது பதிந்தது "பினேஷின்" பேச்சு வார்த்தைகளால்.

பிடிபட்டவர்கள் - சரண் புகுந்தவர்கள் - ஆகிய இரு தரத்தினரையும் ஒன்று திரட்டி பிரான்சிலும் - ரஷ்யாவிலும் "செக்" வீரர்களின் போர்ப் படைகள் உருவாயின. ஒருங்கு சேர்ந்த இளைஞர் கூட்டம் உதிரம் கொட்டும் முன்னணியில் தலை நிமிர்ந்து போர்ப்பரணி பாடிற்று.

தாயகத்துத் தீரர்கள் தீமையை எதிர்த்து திரண்டெழுவதை கண்டனர் அமெரிக்காவில் குடியேறியிருந்த "செக்" மக்கள் வெள்ளித் தோட்டாக்களை அள்ளி வீசினர். செல்வம் குவிந்தது.

"செக்" மக்கள் அல்லாத பிறரிடம் பணம் வசூலிக்கக் கூடாது எனக் கண்டிப்பாகக் கூறி விட்டார் "மசாரிக்". பிற நாட்டவரிடம் பணவுதவி பெற்றுல் அரசியல் சதுரங்கக் காய்களாக 'செக்'மக்களை ஆக்கி விடுவர் என அஞ்சினர். அதுவும் உண்மை தானே!

---

# 18 பொதுவுடமைப் பூங்காவிலே...?

பிரிட்டிஷ் நண்பர்களின் ஒத்துழைப்பால் மாற்றுப் பெயரில் தயாரிக்கப்பட்ட அத்தாட்சிப் பத்திரத்துடன் 'ரஷ்யா' புறப்பட்டார்.

'சார்' மன்னரின் அதிகார பீடம் இவரது இன முழக்கத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. "செக்" சுயேட்சை பெறுவதைப்பற்றி "சாருக்கு" அக்கரை தோன்றவே இல்லை. எனவே ரஷ்யாவில் தங்கியிருந்த தன் படைகளை விடுவித்து பிரான்சுக்கு கொண்டு போய் அங்கே நின்றவாறு நேசக் கட்சியாருடன் இணைந்து போராட விரும்பினர்.

இவ் ஏற்பாட்டிற்கு இடையூருக, 1917-ல் 'ரஷ்யப் புரட்சி' பூத்து மலர்ந்தது—அக்ரம ஆட்சி அடியோடு அழிந்தது—மோசக்காரரின் ஆட்சி முழுக்கவும் முற்று பெற்றது—மூட மன்னன் கட்டிக் காத்த கோட்டை தவிடு பொடியாயிற்று—மக்கள் சக்தி மமதையாளர்களை மண்ணேடு மண்ணுக மூடிவிட்டது—அவதிப்பட்டோரின் அண்ணல்கள் அரசாளப் போந்தனர்—'பொதுவுடமை' தொட்டில் ஏறி தாலாட்டுப் பெற்றது—ஏற்ற தாழ்வற்ற சமுதாயம் அமைக்கப்பட்டது.

இப் பொதுவுடமையாளர்கள் முதலில் "மசாரிக்கின்" முயற்சிக்கு உதவி செய்ய முன் வரவில்லை. ஆனல் உருக்கு உள்ளத்தின் உறைவிடம்—ஊனுறு கொண்ட மக்களுக்கு உன்னத வாழ்வளித்த உத்தமன்—உலக மக்களின் சமாதானக் காவலன்—உழைப்பாளி மக்களின் சலிப்பறியா தந்தை—உலகமே துய

ரில் ஆழ அண்மையில் இயற்கை எய்திய ஒப்பில்லா சுடரொளி — "ஸ்டாலின்"— "மசாரிக்கையும்" — அவரது படையையும்—வெளியே செல்ல அனுமதி கொடுத்து விடுமாறு பொதுவுடமைக் கட்சிக்கு தந்தி அடித்தார்.

அனுமதி கிடைத்தது ஒரு வகையில் ஆனந்தமே. ஆனல் எப்படி செல்வது? அதை நினைக்குந்தோறும் அவர் நெஞ்சம் பதறினர். நினைத்துப் பார்க்க முடியாத நீண்ட தூரம்! குலைநடுக்கம் தரும் கொடிய பாதை! கடந்து கடமையைப் பேண வேண்டுமே!

பிரான்சுக்கும்—ரஷ்யாவுக்கும் நடுவே ஆஸ்திரியா வும்—ஜெர்மனியும்! ஊடறுத்துச் செல்ல நினைப்பது உபத்திரவத்திற்கு உடந்தையாவதுபோல. மத்தியதரை கடல் வழியாக போவதெனில் "பல்கேரியாவில்" எதிரிகள் பாசறைகள் போட்டுவிட்டனர். எனவே ஒரே ஒரு வழி தான் மிச்சம். பல்லாயிரக் கணக்கான மைல்கள் பரந்து கிடக்கும் ரஷ்ய—சைபீரிய வனாந்திரங்களைக் கடந்து "விளாடிவோஸ்டாக்" வந்து ஜப்பான் வழியாக "பசிபிக்" சமுத்திரத்தைத் தாண்டி அமெரிக்கா சேர்ந்து அப் புறம் 'அட்லாண்டிக்' பெருங் கடலையும் தாண்டி பிரான்சு போய்ச் சேரவேண்டும்.

இத்திட்டத்திற்கு வேருெரு பெயராக—வெளிப் படைப் பேச்சாக—கூறினல் உலகை ஒருமுறை வலம் வருவது என்றுதானே பொருள். சுலபமான வழியா இது? அயல் நாடுகளில் கொந்தளிப்பு நடந்துகொண் டிருக்கிற நேரத்திலே - போக்குவரத்து வசதிகள் சரிவர கிடைக்காத வேளையிலே—தங்களுக்குரிய சாதனங் களை—தேவைகளை தாங்களே தேடிக்கொண்டு ஆயிர

மாயிரம் தோழர்கள் பூமியை சுற்றிக்கொண்டு போவ தென்றால் சுலபமான செயலா இது?

ஆனால் இனப்பற்று இதயத்திலே மோதி கொப் பளிக்க—"மசாரிக்கை" முழுமனதுடன் தனிப்பெரும் தலைவராக ஏற்று—உயிரைத் துச்சமென மதித்து— உண்மை—வீரம்—அன்பு — ஆண்மை — இவற்றையே மூலதனமாகப்போட்டு இப்பயங்கரப் பிரயாணத்தை ஏற்கப் போட்டியிட்டனர்.

"மசாரிக்" இனி ஏன் மலைக்கப்போகிறார்? உயி ருக்கு அஞ்சாமல் துப்பாக்கி ரவைகள் இருமருங்கினும் பாயும்போது—சந்து பொந்துகளில் குடியிருந்த நண்பர் களைக்கூட கண்டுபேசி—"மார்ஷல் ஸ்டாலினின்" மாபெரும் உதவியை நாடி லட்சியம் ஈடேற படையைக் கொண்டு செல்லும் அனுமதியை அட்டியின்றிப் பெற்ற "மசாரிக் கின்" கெட்டிக்காரத்தனம் இப்போது மட்டும் கெட்டா போய்விடும்?

உலகப்போரின் இறுதி முடிவை கணிக்க முடியா விட்டாலும், போர் விரைவில் நின்று விடலாமென யூகித்துக்கொண்டார். ஆகவே அதிவிரைவில் அமெ ரிக்கா சென்று அங்குள்ளவர்களின் ஆதரவை தன் பக்கம் திரும்புவதன் அவசியத்தை உணர்ந்தார். புறப் படப்போகும் படைக்கு புதுத் தலைவரை நியமித்தார். அவர் கையாளப்போகும் கொள்கை இன்னது என்ப தையும் இயம்பிவிட்டு விடைபெற்றார் "மசாரிக்".

1918-ல் மார்ச் மாதம் முன்னதாகவே "டோக்கியோ" வந்திறங்கினர். போகுமிடங்களில் எல்லாம் மாறுதலால் 'மலர்ப் பூங்கா' அமைத்த ரஷ்யப் புரட்சியைப் பற்றியே 'மசாரிக்'கிடம் விபரம் கேட்டனர். இதை பெருமை

யோடு மிகமிக விவரமாக விளக்கி வைப்பார். "செக்" இனத்தின் உரிமையைப்பற்றி கூறுகையில் அமெரிக்க ஜனாதிபதி "வில்சனுக்கும்"—நேச நாட்டினருக்கும்— சமர்ப்பிப்பதற்காக தான் முன்கூட்டியே தயாரித்து வைத்திருந்த அறிக்கையை வாசித்துக் காட்டிவிடுவார். ' "சார்" ஆட்சி மீளாது—எழ முடியாத சவக் குழியில் விழுந்துவிட்டது—"லெனின்" ஜெர்மானியருடன் நட்புறவு கொண்டாடினாலும் கூட நேச தேசக் குழுவினர் பொதுவுடமை ரஷ்யாவுக்கு விரோதமாக போர் தொடுப்பது தவறு" இது அவரது அறிக்கையில் பொதிந்துள்ள சத்துள்ள சாரம்!

யாரும் எதிர்பாரா நிலைமையிலே, இப்புனிதப் போராட்டத்திற்கு சாதகமான சம்பவம் நிகழ்ந்தது. இது "மசாரிக்"கின் பிரயாணத்திலே ஊக்கமளித்தது, அவர் 'ரஷ்யாவில்' விட்டு வந்த படைகளுக்கும் - ரஷ்யப் படைகளுக்கும் கைகலப்பு ஏற்பட்டு விட்டது. ஏதோ எதிர்பாராத தவறுதல் காரணமாக ஏற்பட்ட அந்த சச்சரவில் "செக்" வீரர்கள் தீவிரமாகப் போராடி அற்புதமான வகையில் தங்கள் இனப் பெருமையை நிலை நிறுத்தினர்.

இந்த வீரப் போராட்டத்தை பற்றிய ஒரு செய்தி எண் திசைகளுக்கும் எட்டியது. அந்த நேரத்திலே ரஷ்யர்களின் வீரத்துக்கு உலகெங்கும் மட்டற்ற மதிப்பும் - பயமும் நிலவி யிருந்தன. அப்பேர்ப்பட்ட ரஷ்யர்களை அவர்களுடைய நாட்டுக்குள்ளேயே வைத்துப் போரிட்டு வென்றனரே 'செக்' வீரர்கள் என்றவுடன் 'செக்' இன வீரத்தின்மேல் மதிப்பு பிறந்தது உலகோருக்கு.

---

# 19. வில்சனின் வரவேற்பு

"மசாரிக்கை" அமெரிக்கா அமோகமாய் வர வேற்ற காட்சியை விவரிக்கவா வேண்டும்?

எதிரிகள் என்றாலும் எப்படிப்பட்ட தொல்லைகள் தந்தவர்கள் என்றாலும் உண்மையான சுதந்திர ஆர் வம் மிக்கவர்களை பெரிதும் பாராட்டும் பண்பு மிக்கவர் கள் மேலை நாட்டினர்.

ஜனாதிபதி "வில்சன்" மிகுந்த கௌரவத்தோடு— பிரியத்தோடு—"மசாரிக்"கை வரவேற்றார்—பேசினார்.

'ஆஸ்திரிய' ஆட்சியாளரின் அநீதி—அடக்குமுறை —ஆர்ப்பாட்டம் ஆகியவற்றைப் பற்றிய விளக்கவுரை- அவர்களின் ஆதிக்கத்தின் கீழுள்ள இதர "ஸ்லாவ்" மக் கள் வாழும் நாடுகள் வருங்காலத்தில் எப்படி அமைக் கப்படவேண்டு மென்பதற்கேற்ற விரிவுரை—'செக்' நாட்டின் உடனடியான விடுதலைக்கான ஆய்வுரை— இவ்வாறு பல்வேறு பகுதிகளாகப் பிரிந்து "வில்ச னிடம்' தன் கருத்துரையை சமர்ப்பித்தார்.

அமெரிக்காவிலே ஏராளமாக பரவிக் கிடந்த "செக்" இனத்தவர் "விடுதலை"ச் சங்கங்கள் நிறுவியிருந் தனர். அவர்களைப் பார்வையிட்டார்—சொற்பொழிவாற் றினார். இதுகாறும் சுரணையற்றுக் கிடந்தவர்கள்கூட சூடு பெற்றனர். அவருடைய பெண்வழி சுற்றத்தார் களும்—நீண்டநாளைய நண்பர்களும்—நல்லுதவிகள் பல நல்கினர்.

அமெரிக்கப் பத்திரிகைகளில் "செக்" சுதந்திர முழக்கம் ஒலிக்கலாயிற்று.

"செக்" இனத்தின் "லட்சிய வரலாற்றை"—ஜெர்மானியர் விரித்த "ஆரிய மாயை"யை —கொடுங்கோலர்கள் "குமரி கோட்டம்" அமைத்து கும்மாளம் போடுகின்ற கூத்தை—அரண்மனையை "பணத் தோட்ட"மாக்கி, மக்களை பிணக் கொட்டடிக்கு கூட்டிச் செல்லும் கொடுமையை — இந்த ஆணவக்காரர்களை அழித்தொழிக்க தான் தீட்டியுள்ள "விடுதலைப் போரை"—"நாடும்—ஏடும்" அதிர்ச்சியுறுமாறு எடுத்துரைத்தார் 'மசாரிக்.'

அமெரிக்க மக்களின் கவனமும் நல்லெண்ணமும் தங்கள்பால் பெரிதும் திரும்பும் வண்ணம் மேலும் மேலும் 'செக்' இனவரலாற்றை விவரித்தார்.

"எங்கள் நாடு 'செக்கோஸ்லோவாக்கியா'— 'செக்' —'ஸ்லாவக்'— 'ஜெர்மானியம்'— 'ருதேனிய' அல்லது 'பைலோ' என்ற நான்கு பிரிவுகள் கொண்டது."

"இந்த நான்கு பிரிவுகளில் 'ஜெர்மானியர்' குடியேறிய நாடோடிக் கும்பல். அடுத்துக் கெடுக்கும் ஆரியர் பரம்பரையே 'ஜெர்மானியர்' 'செக்'—'ஸ்லாவக்' —'ருதேனிய'ப் பிரிவினர் பழங்குடிகள். இம்மூவரும் ஒரே இனத்தவர்."

"செக் மொழிக்கும்—'ஸ்லாவக்' மொழிக்கும் அதிக வேறுபாடு கிடையா. ஒன்றை ஒன்று தழுவிய ஒரு தாயின் இருபிள்ளைகளே!"

"ஸ்லாவக்கிய"ப் பகுதி ஹங்கேரியக் கூட்டரசின் ஆதிக்கத்திலே அடிமைப்பட்டுள்ளது. 'செக்' மக்களைப்

பார்க்கிலும் 'ஸ்லாவக்' மக்கள் மிகமிக மட்டரகமாக நடத்தப்படுகின்றனர். ஹங்கேரிய ஆணவம் ஜெர்மானியரின் ஆணவத்திற்கு அணுவளவேனும் இளைத்ததல்ல.''

''ஆஸ்திரியப் பேரவையில் மண்டியிட்டுக் கிடந்த 'ஹங்கேரி' இரண்டு அரசுகளுக்கு மன்னன் ஒருவனே என்ற முறையில் சமஉரிமை பெற்றது.''

''ஆனால் வாதாடி வாக்குரிமை பெற்ற அதே 'ஹங்கேரி'—போராடி பிறப்புரிமை கொண்ட அதே 'ஹங்கேரி'—மன்றாடி சமபங்கு வாங்கிய அதே 'ஹங்கேரி'—பிறருக்கும் அந்த வாக்குரிமை—பிறப்புரிமை - சமபங்கு - தேவைதான் என்ற பேருண்மையை ஏனோ மறந்துவிட்டது! மறைக்கவும் முயல்கிறது! மடிக்கவும் விரும்புகிறது!''

''ஏன்?...........?''

''ஹங்கேரியருக்கு இடித்துரைப்பதானால், அந்த தியாகிகளுக்கு விடுதலை வாங்கித்தர எத்தனை 'ஸ்லாவக்' மக்கள் உழைத்தனர்-உயிர் நீத்தனர் என்பதற்கு புள்ளி விபரமாக பட்டியல் தரமுடியும் எங்களால். கிடைத்த விடுதலையில் ஒரு சிறிதளவுகூட 'ஸ்லாவக்' மக்கள் அனுபவிக்க முடியாதவாறு அவர்களை அடக்கி ஒடுக்கி 'ஸ்லாவக்' மண்டலத்தைத் தங்கள் நாட்டின் ஒரு பகுதியாக்கி ஊறு செய்கின்றனர் அந்த உன்மத்தர்கள்.''

''ஹங்கேரியின் மிருகப் பிடியிலிருந்து மீண்டும் மறுமலர்ச்சி காண 'ஸ்லாவக்' மக்கள் மனம் துடிக்கின்றனர். ஆகவேதான் தங்கள் இன மக்களான 'செக்' பிரிவினருடன் கூட்டாய் நாடமைக்க நினைக்கின்றனர்.

ஒரே அணி வரிசையில் திரண்டுவிட்டனர். இனி உயிர் சாயும் வரை ஓய்வில்லை. 'சேக்' இனத்தான் உடலில் உதிரம் ஒரு சொட்டு உள்ளவரையிலும் போராடுவோம். வெற்றி காண விரையும் எங்களை வாழ்த்தி அனுப்புங்கள். ஆதரவு தாருங்கள்."

இந்த சொல்லோவியம் சோதாவைக்கூடச்சுட்டது. தோழர்கள் பலரின் உள்ளங்களைத் தொட்டிழுத்தது.

---

# 20. விடுதலை - விடுதலை

மூடுபனி மறைந்தது—விடிவெள்ளி முளைத்தது.

அமெரிக்க ஜனாதிபதி 'வில்சன்' தமது அறிக்கையில்—நேச நாடுகளின் போர் நிறுத்த ஒப்பந்த ஏட்டில்—'செக்'— 'ஸ்லாவக்' — நாடுகள் விடுதலை பெற்று 'செக்கோஸ்லோவாக்கியா' சுதந்திர நாடாக்கப்பட வேண்டும்'' எனப் பிரகடனப்படுத்தினார்.

இது மாவீரன் 'மசாரிக்கின்' சாதனை.

அதேபோல பிரஞ்சுப் பேரரசு தனது பிரகடனத்திலே 'செக்'—'ஸ்லாவக்' நாடுகள் ஆஸ்திரிய பிடியினின்று பிரிக்கப்பட்டு ஒரு தனி நாடாக அமைதல் அவசியம்—'மசாரிக்கை' தலைவராகக் கொண்ட நடு நாட்டாட்சிப் பேரவையை வருங்கால 'செக்கோஸ்லோவாக்கியா' நாட்டின் அரசாங்கமாக அல்லது அதன் கருவாக அங்கீகரிக்கிறோம்'' என்று கூறிவிட்டனர். இது 'பினேஷூம்' - 'ஸ்டிபானிக்கும்' சாதித்த செயலாக்கம்.

இவ்வளவும் ஏற்பட்ட பிறகுமா கைகட்டி—வாய் பொத்தி அமர்ந்திருப்பார்கள் ஆஸ்திரிய ஆளவந்தார்கள்?

பலவிதமான புரட்டுகளை—அரசியல் தந்திரங்களை கையாண்டு பார்த்தனர். மன்னருக்கு உட்பட்ட 'சுயாட்சி' வழங்குவதாகத் தேனொழுகத் தெரிவித்தனர். 'மசாரிக்கின்' நாணயத்தையும்—புரட்சி இயக்கத்தின் நேர்மையையும்—களங்கப்படுத்தி காரியங்களைக் கெடுக்க சூழ்ச்சி பொறி வைத்தனர்.

அணையப்போகும் விளக்கின் அந்திம நேர வெளிச்சம் - சாகப்போகும் ஜீவனின் கடைசி நேர இழுப்பு - இப்போது ஆஸ்திரியப் பேரரசுக்கு!

அமெரிக்க ஜனாதிபதியிடம் காவடி தூக்கினர் கடைசியாக. இறுதி நிமிடத் தந்திரம்! ஜனாதிபதி 'வில்சன்' வரலாற்று விற்பன்னர்—நேர்மை நெஞ்சினர்— 'செக்' தேசத்தின் மக்கள்தம் சக்தியை உணர்ந்தவர்—'மசாரிக் கின்' மாசுமருவற்ற மாண்பினைக் கண்டவர்.

"ஏற்கனவேயே 'செக்' மக்களுக்குக் கொடுத்த வாக்குறுதியை மாற்ற முடியாது" என தீர்க்கமாகத் தெரிவித்துவிட்டார்.

இக்காலத்திய அரசியல் மேதைகளைப்போல விநாடிக்கொரு விளக்கம் வெளியிடுபவர் அல்ல வில்சன்!

'செக்' மக்களின் சுதந்திரம் உறுதியாக்கப்பட்டது.

'1918 - ஆம் ஆண்டு நவம்பரில் 'தாமஸ் மசாரிக்' 'செக்' நாட்டின் முதல் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.'

இச்செய்தியை 'பினேஷ்' ஆனந்தம் பொங்க அமெரிக்காவிலிருந்த 'மசாரிக்'குக்கு அறிவித்தார். 'நியூயார்க்' நகரமே கூடிவிட்டது 'மசாரிக்' தங்கியிருந்த விடுதியின் முன்னே!

அவ்விடுதியின் உச்சி முகட்டிலே 'செக்' சுதந்திரக் கொடி சிலீரிட்டு பறந்தது.

பாராட்டுரைகள் பறந்து வந்தன. விருந்தும் வேடிக் கையும் வைத்து புகழ்மாலை சூட்டி 'மசாரிக்'கைக் கௌர வித்தனர்.

ஜனாதிபதி 'வில்சனை'—முன்னாள் 'மசாரிக்' அல்ல - ஜனாதிபதி 'மசாரிக்' என்ற முறையில் கடைசியாகக் கண்டு பேசி, அவரது ஆதரவிற்கும் - அமெரிக்க மக்களின் அன்பிற்கும் - நன்றி நவின்றுவிட்டு கப்பல் ஏறினார்.

நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு நாதியற்றவராய் ஒரு நாரீமணியை நாடி ஓட்டைக் கப்பலிலே ஏழ்மையின் பிரதிநிதியாய் அமெரிக்கா வந்து சென்ற

'மசாரிக்'—இன்று மீட்சிபெற்ற நாட்டின் முதல் தலைவராய்—பாடுபட்ட பலனை அனுபவிக்கும் பேறுபெற்ற பெருந்தகையாய்—உறுப்படாத வாழ்வில் உழன்று கிடந்த மக்களைத் தட்டி எழுப்பி தலைநிமிர்ந்து தரணியிலே நடக்கச் செய்த தீரராய் — எங்கணும் இன்முகங்களைக் காணும் எழில் மிகுந்தவராய்—லண்டன் வந்திறங்கினார்.

அங்கே அபரிமிதமான வரவேற்பு அவருக்கு. பின்னர் பிரான்சு சென்று பேருதவி புரிந்த மந்திரிகளுக்கு நன்றி நவின்றார்.

டிசம்பர் மாதம்—வெற்றிவீரர் —விடுதலைத்தளபதி 'செக்' இனத் தந்தை—'மசாரிக்' தாயகத்தின் எல்லையை மிதித்தார்.

சுதந்திர பூமியிலே காலடி எடுத்து வைக்கிறோமே என்ற களிப்பு கூத்தாட—எக்காளமிட்டு கூடி நிற்கும் மக்கள் மத்தியிலே நீந்தினார் 'மசாரிக்.'

எத்தனையோ விதங்களில் அவர் இன்னல்களை அனுபவித்தார். மூத்த மகனை பறி கொடுத்தார். புத்திரியை இழந்தார். செல்வக் குமாரி சிறையிடப்பட்டு,

சொல்லொண்ணு சிரமத்திற்கு ஆளாகி இப்போது விடு தலையானுள். கட்டிய மனைவி கணவனைப் பிரிந்த கவலையால்—தீராத நோயாளி யானுள். சிறப்புடன் விளங்க வேண்டிய குடும்பம் சிதறிப் போயிற்று. வாழ்க்கை வளமிழந்து செழிப்பு சிதைந்தது.

ஆனுல் லட்சியம் ஈடேறிற்று — உரிமை வென்றது-உண்மை ஓங்கிற்று—"செக்" இனம் இன்பச் சோலையாகி விட்டது—நாடு தனி அரசு பெற்றது—"விடுதலை—விடுதலை"என முரசறைந் தார்—இப்போது "ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம்" என அகமகிழ்ந்தார்.

இதனைவிட ஒரு பொதுநல ஊழியருக்கு ஏது இன்பம்?

"ஏழை வண்டி யோட்டியின் மகன்—கவைக் குதவாக் கசடன்—உழைப்புக்கு லாயக்கற்ற ஊதாரி" என்ற பட்டங்களுக்கு உரியவரான "மசாரிக்", இப்போது அந்நாட்டின் ஆட்சி அரியணையில் ஆள்பவராக—நாட்டின் குரிசி லாக—குடியரசுத் தலைவராக — மக்களின் குரலாக—வீற்றிருந்தார்.

நாடு திரும்பும் வழியில் 'ஸ்டிபானிக்' விமானம் நொறுங்கி மாண்டார் என்னும் செய்தி 'மசாரிக்" தலைமை ஆசனத்தில் அமர்ந்தவுடன் எட்டியது. தனக்கு அருந்துணையான கரம் ஒடிந்து போனதே எனக் கவலையுற்ருர். ஆயினும் பதவி ஏற்ற தருண மாதலால் மன ஆறுதலை வருவித்துக் கொண்டு "செக்கை"ச் செப்பனிடுவதில் செயலாற்றினுர்.

---

# 21. சிலை வடித்த சிற்பி

"செக்"கை உருவாக்கிய சிற்பி என்றே அவரைக் குறித்து வரலாற்றுச் சின்னங்களில் செதுக்கி யுள்ளனர். சிலை வடித்த சிற்பி எனச் செப்புகின்றனர்.

வல்லரசு கையினின்று மீண்டு, விடுதலை நாடாக அமைக்கப்படும் ஒரு நாட்டின் ஆரம்ப கால அல்லல்களை நீக்குவது—அவதியை போக்குவது — அவ்வளவு சுலபமான செயல் அல்ல. வெள்ளையன் வெளியேறியவுடனே இந்திய உபகண்டம் எத்தனை இடர்களை எதிர் நோக்கிற்று. இன்றுவரை இந்திய உபகண்டத்தின் இன்னல்கள் களைந்தெறியப்பட வில்லையே! குமுறிக் கிடப்போர் தொகை குறையவில்லையே! நாளுக்குநாள் எண்ணிக்கையில் அல்லவா ஏற்றம் காண்கிறோம். பசி-பஞ்சம்—பிணி என்ற கூக்குரல் மூலை முடுக்குகளிலெல்லாம் கேட்கிறது—இந்தியா சுயாட்சி பெற்ற குடியரசு நாடு தான். நம்மவர்கள் தான் நாடாளும் நாயகங்களாக வீற்றிருக்கின்றனர். ஆயினும் வேதனையை விரட்ட முடியாது விழிக்கின்றனர்.

ஏன்...............?

இது ஆரம்ப காலத்தவறு! வல்லரசின் கரத்திலிருந்து மீளும் ஒருநாடு நிர்வாகத்திறனோடு முழு முழுக்க சீர்படுத்தப்பட வேண்டும். இந்த நிர்வாக யந்திரம் பழைய உடைசல் யந்திரமாக இருந்தமையால் சுதந்திரம் பெற்ற இந்தியா சுபீட்சத்தை நாடமுடியவில்லை.

அரசியல் நுண்ணறிவாளரான 'மசாரிக்' இதை நன்கு உணர்ந்திருந்தார். ஆகவே பதவி ஏற்ற மறு நாளே ஆலோசனைக் குழு அமைத்தார். "பினேஷை" வெளிநாட்டு மந்திரியாகவும்-"டாக்டர் கிராமர்" போன்ற பல்வேறு இயக்கத் தலைவர்களை பெரும் பதவிகளில் பொறுப்புள்ளவர்க ளாகவும் நியமித்தார்.

சுதந்திர செக் நாட்டை சூழ்ந்து வரப் போகும் சூறுவளி—சூழ்ச்சி—சங்கடங்கள் என்னென்ன என் பதை எடை போட்டு அளந்தார். சிக்கலான பிரச்சினை களை உடனடியாக தீர்ப்பதற்கான திட்டங்களைத் தீட்டி னர். எல்லைத் தகராறுகளை வரம்பு கட்டினர். எல்லைப் போராட்டங்களை எடுத்த அடி பின் வாங்காது ஏற்று முடித்தார்.

ஆட்சி பிளவு என்பது கண்ணைப்பிடுங்கும் கொடூர நோய் என நயமாக எடுத்துரைத்தார் நண்பர் குழா முக்கு. இடை இடையே கட்சியில் ஏற்பட்ட உடைப்பு அவரது உண்மை உரையில் அடைபட்டது.

ஓயாத—ஒழியாத—உபத்திரவங்கள்! எதிரிகளின் எக்காளம்! உறவாடிக் கெடுக்கும் ஊதாரிகள்! இவற் றுக்கு மத்தியிலே—அலைகள் பெருகிக் கொந்தளிக்கும் கடலிலே ஊர்ந்து செல்லும் கலம்போல சுதந்திர செக் நாடு இன்பக் கரையை நோக்கி விரைந்து செலுத்தப் பட்டது.

சிரமங்களை சுக்கு சுக்கலாக்கி, சுயாட்சிப் படகை செலுத்தும் சீரிய ஆற்றலும்—சிங்கத் தின் நெஞ்சகமும் படைத்த மாலுமி 'மசாரிக்'

உப்பரிகையில் உலாவ—ஓய்வு பெற — உல்லாச பொழுது போக்கோடு உறவாட—வெளிநாட்டு தூதுவர்களுக்கு விருந்தும் வேடிக்கையும் காட்டி விளையாட—நாரீமணிகளின் நளினம் மிகும் நடனத்தில் நெஞ்சம் நாட—கச்சேரிகளுக்கு தலைமை தாங்கி கனதனவானாக காட்சி தர—அவர் விரும்பவுமில்லை. இவற்றையெல்லாம் அனுபவிக்க நேரமுமில்லை அவருக்கு!

"செக்கின்" சுதந்திரத்தை பாதுகாக்கப் போகும்' —கண்காணிக்க அணிசெய்யும்— இளைஞர் பெரும்படையைப் போற்றினர். வீரப் பட்டயங்கள் வழங்கினர். வீரத்தை வரவேற்று வாகை சூடி வளர்த்தாரே யன்றி, மதவெறி ஏறி பார்ப்பானின்—பாதத்தைக் கழுவினாரில்லை. செழிப்புச் சீராடும் சுந்தரச் சோலையாக "செக்கை" சீர்படச் செய்வது எவ்வாறு என்று சிந்தனை செலுத்தினாரே தவிர கோவில் குளம் கட்டி கும்பாபிசேகம் செய்தாரில்லை. குடும்பத்தோடு பகவான் தரிசனத்திற்காக பல ஊர்ப் பிரயாணம் செய்து பொது மக்களின் வரிப் பணத்தை பாழாக்கினாரில்லை.

அல்லும் பகலும் ஆலோசனைக் குழு ஆய்வு நடாத்தியது, செக்கின் வருங்கால வளப்பத்தைப் பற்றி. அதிலே சிறந்த சட்ட வல்லுநர்கள் அங்கம் வகித்தனர். "மசாரிக்" இங்கும் அங்குமாக உலவுவார். அத்தனை பேரும் அவரது வாய் .அசைப்பை எதிர்பார்ப்பர். ஒரு திட்டத்தை சுருக்கமாக ஆலோசனையாளரின் சிந்தனைக்கு விடுவார். அது பலத்த விவாதத்திற்குப் பின் நல்லதொரு திட்டமாக ஏட்டிலே எழுதப்படும்.

இவ்வாறு என்றென்றும் சுறு சுறுப்பாக செயலாற்றி 'செக்கின்" தலைவிதியை நிர்ணயித்தனர்.

1920-ம் ஆண்டு 'செக்' நாட்டு அரசியல் சட்டம் வகுக்கப் பட்டது — ஜனநாயகமே 'செக்கின்' தாரக மந்திரமாக ஏற்றுக் கொள்ளப்பட்டது-அரசாங்கத்தின் நடைமுறை ஒளி மறைவு இல்லாது தெள்ளத் தெளிய விவரிக்கப்பட்டது—புதிய அரசியல் பாதை போடப் பட்டது.

அறிஞர்களின் சிறந்த முடிவுகளுக் கிணங்க உரு வான சட்டதிட்டங்களை முன் வைத்து 'மசாரிக்கின்' ஆட்சி நாட்டை ஆளத் தொடங்கியது.

சமாதானத்திற்காக "செக்" சர்வதேச அரங்கில் அரும்பாடுபட்டது. சகல நாட்டினரும் "செக்" தலைவர் களின் சிறப்பினைப் போற்றினர். குறுகிய கால அள விற்குள், மிகப் பெரிய அரசியல் கொந்தளிப்பை அடி யோடு மாற்றி புதியதோர் நல் உலகு படைத்த "செக்" தலைவராம் "மசாரிக்கை" பாராட்டினர். "படைப்புத் தலைவன்" எனப் போற்றினர்.

1918-ம் ஆண்டு முதற்கொண்டு 1935-ம் ஆண்டு வரை "மசாரிக்" 'செக்' அரசியல் உலகின் ஏகத் தலைவனாய் கோலோச்சினார்—குழப்பம் — திகைப்பு — கலவரம்—எதிர்ப்பு—இவையெல்லாம் இல்லாத வகை யிலே. நாட்டின் மொழி—கலை—பண்பு—வாழ்வு சிறந் தது எல்லா வகைகளிலும். எதற்கும் பிறரை எதிர் பார்க்கும் இழிநிலை இல்லாத இன்ப நிலைபெற யாவரும் உழைத்தனர் உணர்வு உள்ளத்தின் ஆர்வம் குன் றாமல்.

"செக் நாட்டின் அருந்தவப் புதல்வர்—மக்களின் தலைவர் நோய் வாய்ப்பட்டார்" என்ற செய்தி காட்டு

நெருப்பென நாடெங்கும் பரவியது. "எங்கள் பாது காவலருக்கு நோயா?" இதே பெருமூச்சு திசை யெங்கும் கிளம்பி பரவியது.

மந்திரிமார்கள் புடைசூழ—பரிவாரங்கள் பக்கத்திலே இருக்க—"மசாரிக்" படுக்கையில் அமைதியாகக் கிடந்தார். மரணத்தின் கோரப்பிடி அந்த "செக்" வீரரை கசக்கிப் பிழிந்தது. மிகப் பெரிய மருத்துவ நிபுணர்களெல்லாம் வினடிக்கொரு தரம் அவரது உடல் நிலையைச் சோதித்தனர். மருத்துவ அறிக்கையை உடனுக்குடன் அனுப்பினர் மந்திரிகள்—மக்கள் பார்வைக்காக!

தொலை தூரத்துக்கு அப்பால் வாழ்ந்த மக்கள் உள்ளிட்ட ஏராளமான மக்கள் "மசாரிக்கின்" மாளிகையின் முன் கூடி நின்றனர். வானொலி நிலையங்கள் அடிக்கொருதரம் இந்த "விடுதலை வீரனின்" உடல்நிலை பற்றி அறிக்கை வெளியிட்டுக் கொண்டே இருந்தன.

அன்பு—வாய்மை—இன்சொல் இவற்றை அகத்தின் அழகாகக் கொண்ட அண்ணல்—

உலகப் பெரியார்களின் பட்டியலில் முன் வரிசையில் இடம் பெற்ற ஏந்தல்—

வீழ்ந்து கெட்ட - இனத்தின் தாழ்ந்த நிலைபோக்கி—அன்னியரின் ஆதிக்கம் போக்கிய அறிஞர்—

"செக்" இனத்தின் அரசியல்—சமூக - பொருளாதார—கலாச்சார ஆக்க வேலைகளுக்காக நாற்பது வருடகாலம் அரும்பணிபுரிந்த அருந்தவப் புதல்வர்—

எழுபது வயதுக்கு மேல் புரட்சிக் கனலாக மாறிய லட்சிய வாதி—

கல்லூரிப் பேராசிரியராக இருந்து கொண்டே இளமை உலகைப் பண்படுத்திய பெருந்தகை—

பாராளு மன்ற உறுப்பினராக இடம்பெற்று ஆளுவோரின் தவறுகளை இடித்துரைத்த ஏறு.

உண்மையை உருக்குலையாமல் காப்பாற்றுவதற்காக ஊராரின் பழிச் சொல்லையும் ஏற்கத் துணிந்த உத்தமர்.

கொத்தடிமையாக ஏழ்மைக்குடியில் பிறந்து ஏற்றம் கண்ட பெருவள்ளல்—

போலி மத வாதிகளை புற முதுகு காட்டி ஓடச் செய்து—"மதம் என்ற பேய் பிடியாது இருப்பீராக" —என்று இன்னுரை ஈந்த இளவல்—

"கண்மூடி வழக்கமெல்லாம் மண்மூடிப்போகட்டும். மூட எண்ணங்கள் மண்பட்டு மறையட்டும்"—என்று மூதுரைபேசி மடமையை மூறியடித்த முற்போக்கு வாதி—

இந்தியச் சிங்கம் "நேத்தாஜி" போல அயல் நாடுகளிலுள்ள தாயகப்படையைத் திரட்டி தேச விடுதலைக்காகப் போராடிய புண்ய சீலர்—

தென்னாட்டிலே யுள்ள திராவிடப் பெரும் படை-பாசறை—மாதிரி "செக்கிலே" இனப்படை ஏற்படுத்திய பெரியார்—

சீர்திருத்தக் கோட்டைக்கு வாலிபர் வரிசையைப் பெருக்கி முன்னேற்றக் கழகம் அமைத்த அண்ணா—

கருத்தால் தீண்டி கணக்கற்ற வீரர்களை களம் நோக்கி அனுப்பிய கர்மவீரர்—

மொழி ஏகாதிபத்யத்தால் ஒரு நாட்டை முடமாக்கி அரசாளும் முறையை எதிர்த்துப் போரிட்ட முதல்வர்—

ஆரிய பரம்பரையினரான ஜெர்மானியரின் அட்டூழியங்களை அழித்து "ஆரிய மாயையில்" அமிழ்ந்து கிடக்கும் அடுத்த நாடுகளுக்கு அறைகூவல் கற்றுத் தந்த அரசியல் வாதி—

1937-ம் ஆண்டு தனது 87-வது வயதில் இம் மண்ணுலகை நீத்தார்—மறைந்தார்.

அங்கே மொழிகாத்த முதல்வர் மறைந்த அதே ஆண்டில்தான் இங்கே ஆச்சாரியாரின் ஆட்சியின் போது தமிழ் மொழிகாக்க தீர மிக்க தமிழர்கள் களம் புகுந்தனர்.

---

# 22. இன்பத்தின் எல்லை

இன உணர்ச்சியில் திளைத்து, அடிமைபட்ட நாடு விடுதலை பெற்ருல்—மக்கள் ஒற்றுமை மாருமல் உன்னத நிலைபெறுவர் என்ற "மசாரிக்"கின் தத்துவம் "செக்கை" சிறப்பு அடையச் செய்தது.

இன்பத்தின் எல்லையை நோக்கி இன்றுவரை "செக்" எடுத்த அடி பின்வாங்காது முன்னேறி வருகின்றது. "மசாரிக்" கிற்குப்பின் மூன்று தலைவர்கள் முன் நடத்திச் சென்றனர் "செக்" இனத்தை.

1953-ம் வருடம் மார்ச் மாதம் 21-ம் நாள் 5-வது "செக்" குடியரசு தலைவராக "அன்டோனின் ஜபோடோக்கி" (—Antonin Zapotocky-) பதவி ஏற்றிருக்கிருர். இவர் சிறந்த பொதுவுடமை வாதி. இவருக்கு முன் பதவி வகித்தவரும் சென்ற வாரம் இயற்கை யெய்தியவருமான தலைவர் "கிளிமண்ட் கோட்வால்டு" காலத்தில் ஆட்சி முறை பொதுவுடமைக் கொள்கையானது.

பதவி ஏற்றபின் "பிரேக்" மாளிகையின் பலகணியில் நின்று பல்லாயிரக்கணக்கான "செக்" மக்கள் முன் பேசுகையில் "ஒற்றுமை மாருமல் சுவர்க்க பூமிக்கு "செக்" குடி அரசை கொண்டு செல்வோமாக" என்று பேசினர் "ஜபோடோக்கி"

"மசாரிக்கை"ப் போல இவரும் உழைப்பாளியின் குடிலில் பிறந்தவர்—வளர்ந்தவர்—பாடு பட்டவர். கல் தச்சுப் பட்டறையில் கூலியாளாக வேலை செய்தவர்.

இன்பத்தின் எல்லையில் ஏற்றம் கண்டுள்ள "செக்" நாட்டின் சிற்பி "மசாரிக்" வாழ்வு திராவிடம் பின் பற்ற வேண்டிய முன் வழியே யாகும். தன் மொழிப் போராட்டத்திலே—இன உரிமை இயக்கத்திலே—"திராவிடம்" மறைந்த மாவீரர் "மசாரிக்" கண்ட வெற்றி எய்துமாக! இன்பம் மலருமாக!

—

# 23. நினைவு மண்டலத்திலே நிலைக்க வேண்டிய நிகழ்ச்சிகள்

1 கி. பி. 5-வது நூற்றாண்டு முதல் கி. பி. 17-வது நூற்றாண்டு வரை.

2 "மொரேவியா"—"பொகீமியா"—என்ற பெயர்களுடன் 'செக்' நாடு தனிநாடாகவே இருந்தது.

3 கி. பி. 12-ம் நூற்றாண்டு முதல் ஜெர்மானியர் 'பொகீமியா'வில் குடியேறினர்.

4 கி. பி. 13-ம் நூற்றாண்டி லிருந்தே தேசீய உணர்ச்சியை வளர்த்தனர் சில பெரியார்கள்.

5 1415-ம் ஆண்டு ஜூலை 6-நாள் 'ஜான்ஹஸ்' உயிருடன் கட்டி வைத்துக் கொளுத்தப் பட்டார்.

6 1800-ம் ஆண்டில் 'பில்சென்' என்ற நகரமும், 1814-ம் ஆண்டில் 'லிட்டோமெரிஸ்' என்ற நகரமும், 'செக்' மொழி பேசத் தெரியாதவர்களுக்கு பிரஜா உரிமையை மறுத்தன — சட்டம் இயற்றின.

7 1619-ல் 'மத்தயாஸ' மன்னன் மடிந்ததும் இரண்டாவது 'பெர்னண்டு' முடி சூட்டிக் கொண்டான்.

8 1620-ம் ஆண்டு மன்னனுக்கும் — மக்களுக்கு மிடையே 'வெள்ளை மலைப் போர்' நடந்தது.

9 1627-முதல் அடுத்த 300 ஆண்டுகள் மூடிய 'செக்' உருவே தெரியாதபடி சிதைவுற்றது.

10 1850-ஆண்டு மார்ச் 7-ம் நாள் 'மசாரிக்' தோன்றினர்.

11 1865-ம் ஆண்டு லத்தின் மொழியில் புலமை பெற்றுர்.

12 1876-ம் ஆண்டு பல்கலைக் கழகம் அவருக்கு 'டாக்டர்' பட்டம் வழங்கிற்று.

13 1878-ம் ஆண்டு காதலி 'காரிக்கை' மணந்து கொண்டார் 'மசாரிக்'.

14 1879-ம் ஆண்டு 'வியன்ன'க் கல்லூரியில் தத்துவப் பேராசிரியராகப் பதவி ஏற்றுர்.

15 1887-ம் ஆண்டு 'பிரேக்கில்' புதிய 'கல்லூரி நிறுவப்பட்டது. 'மசாரிக்' இங்கே விரிவுரையாளரானர்.

16 1890-ம் ஆண்டு ஆஸ்திரியப் பாராளு மன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

17 1914-ம் ஆண்டு 'மசாரிக்' ஆஸ்திரியாவை விட்டுத் தப்பினர்.

18 1917-ம் ஆண்டு 'சார்' ஆட்சியின் வீழ்ச்சி—ரஷ்யர் புரட்சி.

19 1918-ம் ஆண்டு மார்ச்சு மாதம் 'டோக்கியோ' சென்றுர்.

20 1918-ம் ஆண்டு நவம்பரில் 'மசாரிக்' 'செக்' நாட்டு முதல் ஜனாதிபதியாக தேர்ந் தெடுக்கப் பட்டார்.

21 1918-ம் ஆண்டு டிசம்பரில் ஜனாதிபதியாக தாய் நாடு திரும்பினார்.

22 1920-ம் ஆண்டு 'செக்' தேச அரசியல் சட்டம் அமுலானது.

23 1937-ம் ஆண்டு 'மசாரிக்' 87-வது வயதில் மறைந்தார்.

24 1953-ம் ஆண்டு மார்ச்சு 21-ம் நாள் 'செக்' குடியரசின் 5-வது ஜனாதிபதியாக "ஜபோடோக்கி" பதவி ஏற்றார்.




ஸ்ரீமகள் அச்சகம், சென்னை-1

# கலைமன்ற வெளியீடுகள்!

**ஊடுருவி தீட்டியவை:-**

| | | | |
|---|---|---|---|
| அறியாமை | [இங்கர்சால்] | 1 | 0 |
| உண்மை | ,, | 1 | 0 |
| கோயில்கள் | ,, | 1 | 0 |
| கடவுள் | ,, | 1 | 0 |
| மக்கள் உரிமை | ,, | 1 | 0 |
| மதங்கள் | ,, | 1 | 0 |
| நெப்போலியன் | | 1 | 0 |
| தொழிலாளர் | [மார்ஜினி] | 1 | 0 |
| அரசாங்கம் | [லெனின்] | 1 | 0 |
| நாஜி கடவுள்கள் | | 1 | 0 |
| சீனத்துச்சிங்கம் | [சன்யாட்சன்] | 1 | 0 |
| கலிங்கப் போர் | [அசோகன்] | 1 | 0 |
| உலகைத் திருத்திய உத்தமர்கள் | | 1 | 0 |
| ஒளி விளக்குகள் | | 1 | 0 |
| வீரமங்கை ஜோன் | | 1 | 0 |
| ரஸ்புடீன் | | 0 | 8 |
| ரோமியோ ஜூலியத் | [ஷேக்ஸ்பியர்] | 1 | 0 |
| லைலாமஜ்னு | | 1 | 0 |
| நானா | [எமிலிஜோலா] | 1 | 0 |

**விருதை. ந. இராமசாமி—**

| | | | |
|---|---|---|---|
| தளபதி | — | 1 | 0 |
| கருமுகில் | — | 1 | 0 |
| மலர்புரி ராணி | — | 1 | 0 |

**அறிஞர் அண்ணா:-**

| | | | |
|---|---|---|---|
| குமஸ்தாவின் பெண் | | 1 | 0 |
| இதன்விலை ரூபாய் 3000 | | 0 | 12 |
| தேன் துளிகள் | — | 1 | 0 |
| புராண மதங்கள் | — | 1 | 0 |
| தேவ லீலைகள் | — | 0 | 8 |
| அண்ணாவின் உவமைகள் | | 0 | 8 |


**கலைமன்றம்**

122. வரதாமுத்தியப்பன் தெரு

3. No. 275 சென்னை-1

Printed at The Srimagal Company, Madras-1.